சிதம்பரம் மெய்கண்டார் தத்துவக்கழக வெளியீடு–1

# சைவ சமய :: :: அறிமுகம்










ஆசிரியர்:

மாணிக்கவாசகஞானதேசிகன்

சிவராஜயோக மடம்,

பூம்புகார்.

சிதம்பரம் மெய்கண்டார் தத்துவக்கழக வெளியீடு-1

# சைவ சமய :: :: அறிமுகம்








ஆசிரியர்:

மாணிக்கவாசகஞானதேசிகன்
சிவராஜயோக மடம்,
பூம்புகார்.

1962

* * *

இந்நூலின் விற்பனைத்தொகை முழுவதும் சிதம்பரம்
மெய்கண்டார் தத்துவக்கழக வளர்ச்சிக்குப்
பயன்படுத்தப்பெறும்.

* * *

விலை ரூபா 1—50

பாண்டியன் (மின்) அச்சகம், சிதம்பரம்.



உ

சிவமயம்.

## உரிமையுரை

காழியர் தலைவன் கவுணியர் கோமான்
கௌரிமா முலையமு தயின்ருேன்
போழிள மதியான் தன்னையோர் விரலால்
சுட்டுறூஉம் புனிதனெங் குரவன்
வாழியீங் கிவனை யாண்டதென் கருதி
என்றெணி உலகெலாம் மயங்க
ஏழையேன் தனையாண் டளித்தவன் கழற்கே
உரியதிச் சிறியநூல் மலரே.

# முன்னுரை

ஐந்தாறு ஆண்டுகட்கு முன்பு பெங்களூரில் (அல்சூர் ராமகிருஷ்ண மடம்) தங்கிச் சுமார் நான்குமாத காலம் சைவசித்தாந்தச் சொற்பொழிவுகள் செய்யும் வாய்ப்பு அடியேனுக்குக் கிடைத்தது. அப்போது சைவசமயத்தைப்பற்றி முன்னுரையாகப் பேசிய எனது பேச்சே சைவ சமய அறிமுகம் என்ற கட்டுரையாக விரிவடைந்தது. அதற்குக் காரணம் எனது நண்பரும் அண்மையில் காலஞ் சென்றவருமான திருவாளர் காஞ்சி திருநாவுக்கரசு தேசிகர் அவர்கள்தான். பெரியபுராணத் திறவு-தவநெறி என்ற இரண்டும் வானெலிப் பேச்சுக்காக எழுதப்பெற்றவை. "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்" என்ற கட்டுரை சிவப்பிரகாசம் நுதலிய பொருள் பற்றிய பாடல் நுணுக்கத்தை அறிவிக்குமுகத்தான் எழுதப் பெற்றது. ''மெய்ப்பொருள் காண்பதறிவு'' என்ற தலைப்பில் அமைந்துள்ள இரண்டு கட்டுரைகளுள் முதல் கட்டுரை ஏகான்ம வாதக் கொள்கையை முற்றும் உள்ளவாறு எடுத்துக் கூறுவதும் இரண்டாவது கட்டுரை அக்கொள்கையை ஆய்வதுமாக எழுதப் பெற்றன.

அவரவர்கள் பின்பற்றும் சமயத் தலைவர்கள் அறிவுறுத்திய உண்மைகளைப் பிறழாமல் உணர்தற்கும் அக்கொள்கையின் பெருமையினை உணர்ந்து ஆர்வஞ் செய்தற்கும் தத்துவக்கொள்கைகள் பலவற்றையும் ஆய்ந்தறிதல் இன்றியமையாதது. அவ்வாறு ஆய்வது, மற்றவர்களைத்திருத்தவோ அல்லது அவர்களோடு வாதம் புரியவோ அன்று என்பதும், தம்மைத்தாமே செவ்வையாக உணர்ந்து கொள்ளத்தான் என்பதும் இங்கே அறிஞர்கள் கருத்திலிருத்திக் கொள்ளவேண்டும். சைவசமயத்திற் பற்றுடையராய் அதனைப் புரிந்துகொள்ள விரும்பும் இளைஞர்கட்கு இந்நூல் சிறிதாவது பயன்படும் என்பது எளியேனது கருத்து. திருவருள் அதனை நிறைவேற்றி வைப்பதாக.

இந்நூல் வெளிவருதற்கண் உறுதுணையாயிருந்து சென்னை மாநில இந்துமத அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் செம்மல் உள்ளம் படைத்த உயர்திருவாளர் S. சாரங்கபாணி முதலியார், B. A., B. L., அவர்கள் இச்சிறு நூலைப் பொறுமையோடு படித்துப்

பார்த்து அணிந்துரை வழங்கிய பெருந்தகைமைக்கும், அண்ணமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறை ரீடர், வித்துவான் திரு வாளர் க. வெள்ளைவாரணனர் அவர்கள் செய்த உதவிக்கும் என்றும் மறவா நன்றியுடையேன்.

பிழையுளன பொறுத்திடுவர் என்று எண்ணிச் செய்யா விட்டாலும் தவிர்க்கமுடியாத காரணத்தால் மலிந்துவிட்ட பிழைகளைப் பொறுத்தருளுமாறு அன்பர்களை வேண்டிக்கொள்கிறேன்.

ஆசிரியன்.




# அணிந்துரை

திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்.,
ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை.

சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாம்
தெய்வத்தின் மேல்தெய்வம் இல்லெனும் நான்மறைச் செம்பொருள்
மைவைத்த சீர்த்திருத் தேவா ரமும்திரு வாசகமும் [வாய்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் ருளெம் உயிர்த்துணையே.

சைவசமயம் பழமையும் பெருமையும் வாய்ந்தது. சிந்துவெளி நாகரிகத்தைப்பற்றி ஆராய்ந்த சர். ஜான் மார்ஷல் என்னும் பேரறிஞர் சைவசமயத்தினை "உலகத்திலேயே மிகவும் தொன்மை வாய்ந்து இன்றளவும் உயிர்ப்புடன் ஒளிர்ந்து வருவது'' (The most ancient living religion in the world) எனக்குறிப்பிட்டுச் சிறப்பித்துள்ளார்.

இவ்வரும் பெரும் சமயத்துக்குரிய தத்துவக் கொள்கையே "சைவ சித்தாந்தம்" என்னும் பெயரால் வழங்கப்பெற்று வருகின்றது. இச்சிறந்த தத்துவக் கொள்கையைப் பற்றி டாக்டர் ஜி. யூ. போப், ரெவரெண்ட் கௌடி முதலிய மேலைநாட்டுப் பேரறிஞர்கள் பலரும் வியந்து புகழ்ந்து போற்றியுள்ளனர்.

சைவசித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது மிக விரிந்ததும் பெருஞ்செல்வாக் குடையதும் ஐயத்திற்கு இடமின்றி உண்மையிலேயே பெருமதிப்பிற்கு உரியதும் இந்தியநாட்டிலுள்ள சமயக் கொள்கைகளுளெல்லாம் தலைசிறந்ததுமாகும். தென்னிந்திய மக்களின் மிகச் சிறந்த பேரறிவின் பெருவிளைவே சைவ சித்தாந்தம் எனலாம். "கடவுள்-உயிர்-மக்கள் தன்மை-உலகியற்கை-அறியாமை-துன்பம்-காணப்படாத மறுமை நிலைகள் என்பவற்றைக் குறித்த சிக்கலான பொருள்களைத் தெளிந்துகொள்ளும் இத்தகைய சிறந்த முயற்சிபற்றிப் பலரும் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது'' என டாக்டர் ஜி. யூ. போப் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

எனவே சைவசமயத்தைப் பற்றிப் பலரும் அறிந்துகொள்ளச் செய்யும் வகையில் ''சைவசமய அறிமுகம்'' என்னும் இந்நூல் எழுதப்பட்டுள்ளது பெரிதும் பாராட்டற்பாலது.

"விளையாததொர் பரிசில்வரு பசுபாச வேதனையொண்
தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்வாம்"

என்னும் திருஞான சம்பந்தருடைய திருமுதுகுன்றப் பதிகப் பாடலைத் தலைப்பாகக் கொண்டு இந்நூல் தொடங்குகின்றது.

சற்காரியவாதம் மெய்கண்ட சாத்திரத்தின் அடிப்படைக் கொள்கை என்றும், பதி பசு-பாசம் (கடவுள்-உயிர்-உலகம்) என்னும் பொருள்களைப்பொதுவியல்பு சிறப்பியல்பு என இருவகையாகப் பகுத்து விவரிப்பது என்றும் கூறி, ஏனைய மதங்கள் ஆராய்ந்து கண்ட தத்துவங்களை ஒப்புக்கொண்டு அவற்றின் மேலும் பன்னிரண்டு தத்துவங்கள் உண்மையை நிருபித்து மேற்சொன்ன முப்பொருள்களின் உண்மையைக் கூறுவது என்றும் நிலைநாட்டுகிறது. மேலும் இதன்கண் இந்நாளைய விஞ்ஞான முடிபுகளும் சைவ சித்தாந்தத்திற்கு உடன்பாடே என்றும், அவற்றினும் மேம்பட்ட நிலைக்கும் அது செல்லுகின்றது என்றும் ஆசிரியர் நம் மனத்தில் பதியத்தக்கவண்ணம் திறம்பட விளக்கியிருப்பது போற்றத்தக்கது.

பிறகு பதி-பசு-பாசம் என்னும் முப்பொருள்களைப்பற்றி எடுத்துக்கொண்டு தெளிவான முறையில் விளக்குகிறுர்.

சிவஞானசித்தியார் - நெஞ்சுவிடுதூது - சங்கற்ப நிராகரணம்- என்பவற்றிலிருந்தும் திருமூலர் திருமந்திரம் தாயுமானவர் பாடல் ஆகியவற்றிலிருந்தும் மேற்கோள்கள் காட்டி, சிவப்பிரகாசத்தில் "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்" என்ற தொடரின் உண்மைப் பொருளைப் புலப்படுத்துகின்றுர். வேத'உபநிடதங்களின் முடிபே ஆகமங்கள் என்றும் சிவாகமங்களின் ஞானபாதப் பொருளே மெய்கண்ட சாத்திரங்கள் என்றும் கூறுகிறுர்.

புறப்புறச் சமயம் - புறச்சமயம் - அகப்புறச் சமயம் - அகச் சமயம் என்பனவற்றின் விளக்கங்கள் நன்கு எடுத்துரைக்கப் பெற்றுள்ளன,

பெரியபுராணம் சைவசித்தாந்த முடிபுகள் அடங்கிய ஒரு வாழ்க்கை இலக்கிய ஞானநூல் என்பதும் விளக்கப் பெறுகின்றது.

தவம் என்பது யாது என்பதை விளக்கி, தவநெறியின் அவசியத்தையும் இந்நூல் செம்மையுற வலியுறுத்துகின்றது

ஓதுசம யங்கள்பொருள் உணரும் நூல்கள்
ஒன்றேடொன் ருெவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னின்
இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினு லிவையனைத்து மோரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்!
ஆதலினு லிவையனைத்தும் அருமறையா கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீ ழடங்கும்

என அருள்நந்தி சிவாச்சாரியார் அறிவுறுத்தியபடி எந்தச் சமயத்தையும் இகழாமல் அவ்வவற்றிலுள்ள நல்ல கொள்கையும் தன்பால் தழுவிக்கொண்டு அவற்றிற்கெல்லாம் சோபான முறையில் தலை சிறந்து மிகவும் சிறப்புவாய்ந்தொளிரும் சைவ சமயத்தினை நன்கினிது அறிமுகம் செய்து, மேலும் பல நூல்களைப் பயிலுமாறு நம்மனோர்க்கு ஊக்கமும் உணர்ச்சியும் விளைவிக்கும் இச்சிறப்பு நூலினை இயற்றிய ஆசிரியரின் தொண்டு நீடினிது ஓங்குக! இத்தகைய பல நூல்களை இவர் மேலும் மேலும் எழுதுவதற்கு இறையருள் துணைபுரிவதாக.

மா. சோ. சாரங்கபாணி,
17—10—'62

# பொருளடக்கம்

உ

திருஞானசம்பந்த தேசிகன் திருவடி வாழ்க.

# சைவ சமய அறிமுகம்.

---

விளையாததொர் பரிசில்வரு பசுபாசவே தனையொண்
தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்வாம்
களையார்தரு கதிராயிரம் உடையவ்வவ னோடு
முளைமாமதி தவழும்முயர் முதுகுன்றடை வோமே.

—திருஞானசம்பந்தர்.

நான்கு தூண்களால் தாங்கப்பெறும் ஒரு மண்டபம் போன்றது சமயம். அவை நான்கனுள் ஏதாவது ஒரு அங்கம் குறைந்தாலும் அது முழுத்தன்மையுடைய சமயம் ஆகாது. அந்நான்கு தூண்களாவன:—

1. தத்துவ ஆய்வு. [மெய்ப்பொருளாராய்ச்சி]

2 முத்திநிலை. [ஆன்மா அடையவேண்டிய உயர் நிலை]

3. முத்தியடைதற்குரிய மார்க்கங்கள்.

4. அம்மார்க்கங்களில் நின்று நிரூபித்துக்காட்டிய தலைவர்கள்.

இவை நான்கும் செம்மையாகப் பொருந்திய சமயக் கொள்கைதான் உலக மாறுதலுக்கு ஈடு கொடுத்து உயிர்ப்போடு நின்று ஆன்மகோடிகளுக்கு உதவமுடியும். சைவ சமயம் இவை நான்கும் பொருந்திய செம்மையுடையது என்பதை எடுத்துக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கம். மெய்கண்ட சாத்திரம் என்பன சைவ சமயச்சார்பில் எழுந்த மெய்ப்பொருளாய்வு நூல்க

ளாகும். பதி-பசு-பாசம் எனப் பொருள்களை மூன்ருகப் பகுத்து அந்நூல்கள் ஆய்கின்றன. பதி என்பது இறைவனையும் பசு என்பது ஆன்மாவையும் பாசம் என்பது ஆணவம்-கன்மம்-மாயை என்ற மூன்றனையும் குறிக்கும். இவற்றுள் பாசம் என்பதனை உலகம் என மொழி பெயர்த்தல் பொருந்தாது. பாசப்பொருள் மூன்றனுள் ஒன்ருகிய மாயையினை உலகம் எனக் கூறல் (காரண காரிய ஒற்றுமைபற்றி ஒருவாறு பொருந்தும். ஏனைய கன்மமும் ஆணவமும் உலகம் என்ற சொல்லில் அடங்கா. அதனுற்ருன் பாசம் என்பதனைத் தளை என மொழி பெயர்த்துத் தந்தனர் சான்ரேர். விஞ்ஞானிகள் சில கணித விதிகளை ஆதாரமாகக் கொண்டு தாங்கள் கண்ட புதுமைகளை நிரூபிப்பதுபோல் தத்துவ ஞானிகளும் தருக்க முடிபுகளை (அளவை) ஆதாரமாகவைத்துக் கொண்டு தங்கள் தங்கள் தத்துவக் கொள்கைகளை நிரூபிக்கின்றனர். அந்நெறிக்கேற்பச் சைவசமயமும் சில அடிப்படைகளையும் அளவைகளையும் பின்பற்றித் தனது கொள்கையை நிரூபிக்கின்றது; "உள்ளது போகாது இல்லது வாராது" என்ற அடிப்படையை வைத்துக்கொண்டு பதி-பசு-பாசம் என்ற முப்பொருள் கட்கும் பொதுவியல்பு சிறப்பியல்பு என இருவகை இயல்புகளை விவரிக்கின்றது. காண்டல்-கருதல்-உரை என்ற மூன்றனுள் ஏனைய அளவைகளெல்லாம் அடங்கி விடும் என்ற நியாயம் பற்றி இம் மூன்று அளவைகளைத் தான் சித்தாந்த நூல்கள் சிறப்பாகக் கொள்கின்றன.

உலகம் உயிர் கடவுள் என்ற இம் முப்பொருள்களும் கலந்திருக்கும் கலப்புநிலை மிகவும் நுண்மையானதாகவும் பல்லாயிரவரில் ஒருவர்கூட எளிதில் உணர முடியாததாகவும் இருத்தலால் சமயவாதிகள் பலரும் இங்கே மயங்கித் தத்தம் அனுபவத்திற் கெட்டியதே முடிந்த முடிபாக எண்ணிக் கொள்கையாக்கினர். ஐம் பெரும் பூதங்களுள் ஒன்ருகிய ஆகாயம் என்ற பூதத்தை உணரமாட்டாமையால் அதனை மறுத்து ஏனைய நான்கு

பூதங்களை மட்டுமே ஒப்புக்கொண்டனர் லோகாயத வாதிகள். [1]நியூடன் கொண்ட கொள்கையான ஈதர் (eather) என்ற சாதனம் மறுக்கப்பட்டு விட்டதால் விஞ் ஞானிகட்கும் இன்னும் ஆகாயம் என்ற தத்துவம் புலனாக வில்லை எனத் தோன்றுகிறது. தவிரவும் உலகமே சூனியம் எனவும் இல்பொருள் பொய்த் தோற்றம் அநிர் வசனீயம் எனவும் பல்வேறு சிந்தனையாளர்கள் கூறிச் சென்றுள்ளனர். இந்திய நாட்டில் வழங்கும் சமயக் கொள்கைகளில் பெரும்பாலானவை [ஏகான்மவாதம் — வைணவம் — சாங்கியம்] பிரகிருதிக்குக் கீழ்ப்பட்ட இரு பத்து நான்கு தத்துவங்களைத்தான் ஒப்புக்கொள்கின் றன. ஆனல் சைவ சித்தாந்தமோ அவை 'இருபத்து நான்கையும் அப்படியே ஒப்புக்கொண்டு அவற்றின் மேலும் பன்னிரண்டு தத்துவங்கள் இப்பிரபஞ்ச வெளி யைத் தாங்கி நடத்துகின்றன என நிரூபிக்கின்றது. காஷ்மீர சைவமும் சாக்தேயமும் சைவசித்தாந்தம் போலவே முப்பத்தாறு தத்துவங்களையும்பற்றிப் பேசு கின்றன. மாயா காரியமும் ஜடமுமான இப் பிரபஞ்சமே இன்னும் முற்றிலும் உணரமுடியாதநிலையில் இருக்கு மானல் இதைவிட நுணுக்கமான ஆன்ம உண்மை யையோ அல்லது கடவுள் உண்மையையோ எளிதில் உணர முடியுமா? சிந்தித்துப் பாருங்கள் அன்பர்களே! விஞ்ஞானிகள் முன்பெல்லாம் கடவுள் உண்மையை மறுப்பதிலேயே முனைந்து நின்றனர். ஆனல் தற்போது அந்நிலை மாறிவிட்டது. நேற்றுவரை தோன் றிய விஞ்ஞானிகள் அனைவர்க்கும் தலைவர் எனப் போற்றத் தகுந்த டாக்டர் ஐன்ஸ்டின் ''தெய்வ சத்தி உலகத்தை ஒழுங்குபெற நிர்வகித்து வருவதால் தான் விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்ய முடிகின்றது'' எனக்கூறுகின்றார். மனித வாழ்வின் நியதியைத் தெய்வ சத்தி கண்காணித்து நடத்தி வருகின்றது என்பதைத் தன் அனுபவத்தில் உணர்ந்ததாக டாக்டர் மில்லிகன்

---

1. டாக்டர் ஐன்ஸ்டினும் பிரபஞ்சமும் என்ற நூல் 6-வது அத்தியாயம்,

என்பவர் கூறுகின்றார். [1]மேனாட்டுப் பேரறிஞர்கள் எல்லாம் இப்போது "நானார் என் உள்ளம் ஆர்" என்ற ஆராய்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டு வருகின்றனர். ஆன்மா என்பது எது? அணுக்கூட்டங்களில் சேர்ந்த ஒருவகை அணுவா? அல்லது வேறு பொருளா? என்றெல்லாம் சிந்தித்து வருகின்றனர். யுரேனியம் என்ற உலோக அணு சிதைந்துகொண்டே வரும் நிகழ்ச்சியை ஆதாரமாகக்கொண்டு உலகம் ஒரு காலத்தில் தோன்றியதுதான் எனவும் ஒரு காலத்தில் அழிவுறும் எனவும் முடிவுகட்டுகின்றனர். இருப்பினும் ஜடப் பொருள் வேறு, சித்துப்பொருள் வேறு என்ற முடிபினை விஞ்ஞானிகள் ஒப்புக்கொள்ளாதவரை அவர்கட்கு உண்மை புலப்பட வழியே இல்லை. அணுவின் ஆற்றலைக் கண்டுபிடித்த டாக்டர் ஐன்ஸ்டினும் அந்த அணுக்கூட்டங்களைச் சேர்ந்த ஓர் அணுத்தான் என்று கூற எந்த விஞ்ஞானிக்காவது துணிவு வருமா? வராது. அப்படியானால் அவர் உடம்பினுள் தங்கியிருந்த "அறிவாற்றல்" எது என்று சிந்தித்து ஆராய்ந்தால் உண்மை புலப்பட்டுவிடும். விஞ்ஞான முடிபுகளைச் சைவசித்தாந்தம் ஒத்துக்கொள்வதோடு அவற்றுக்கும் மேற்பட்ட உண்மைகளையும் புலப்படுத்துகின்றது. ஆதலால் சைவசித்தாந்தம் கூறும் பதி-பசு-பாசம் என்ற முப்பொருள்களையும் பற்றி முறையே இங்குச் சிந்திப்போம்.

## பதி (கடவுள்)

ஒருசாரார் நம்பிக்கைமாத்திரத்தாற் கடவுளை ஒப்புக்கொண்டு, கடவுளுக்கு உருவமில்லை எனவும் கடவுள் அறியப்படாதவர் எனவும் கூறுகின்றனர். இவ்வாறு கூறுகின்றவர்கள் ஒரு வாற்றானும் கடவுளைக்காணாதவர்களே. பிறிதொரு சாரார் கடவுளும் ஆன்மாவைப்

---

1. "The Destiny of Man" "The Mysterious Vniverse" "Man the Unknown" என்ற நூல்கள் இதற்குச் சான்றாவன

போலவே பிறப்பு இறப்பு விருப்பு வெறுப்பு இன்ப துன்பங்கட்களாதல் கூடும் எனவும், அஃது அவனதுஎளி வந்த தன்மையைக் காட்டுவதெனவும் சாதிக்கின்றனர். சர்வ வல்லமையும் உடைய இறைவன் அவதிக்கும் இகழ்ச்சிக்கும் ஆளாகாமலே எளிவந்த செயல்கள் செய் தல் கூடும் என்பதையும், முற்றுணர்வு, முடிவிலாற்றல், வரம்பிலின்பம் முதலிய இறைமைக் குணங்கட்கு விரோத மாக ஒருநாளும் இறைவன் அவதியுறமாட்டான் என்ப தையும் அவர்கள் சிந்தித்ததாகத் தெரியவில்லை. மற் றொரு சாரார் பரப்பிரம்மமே (கடவுள்) ஈசுரனாகவும் ஆன்மாவாகவும் பிரபஞ்சமாகவும் மயங்கி உணர்ந்து பின் னர் விசாரத்தால் தானே பிரம்மம் எனத் தெளிந்து கொள்ளும் எனக் கூறுகின்றனர். சத்து சித்து ஆனந்த மயமான பிரம்மம் மயங்குமென்பது அதன் குணத்திற்கு விரோதமாகும். மயங்கியது உண்மையானால் அது பரப் பிரம்மம் அன்றாகும். தவிரவும் சித்துப் பொருளிலிருந்து ஜடப் பொருள் உற்பத்தியாகும் என்பதும் முற்றறி வுடைய பொருள் மயங்கித் தெளியும் என்பதும் பிரத்தி யக்ஷத்திற்கும் அனுமானத்திற்கும் ஒவ்வாத விதண்டா வாதமாகும். இனி, சைவசித்தாந்தத்தை அறிவுறுத்திய செந்நெறிச் செல்வர்கள் இறைவனை நேரே கண்டும் இறைவனாலேயே உணர்த்தப்பெற்றும் உண்மை அநு பூதி பெற்றவர்களாதலால் அவர்கள் கூற்று மதியூகத் திற்கும் அனுபவத்திற்கும் ஒத்து வருகின்றது. அதா வது எல்லாவற்றையும் கடந்தநிலையும் எல்லாவற்றிலும் கலந்த நிலையும் ஐந்தொழில் இயற்றவும் மெய்யன்பர் கட்குக் காட்சி கொடுத்துத் தேற்றவும் உருவத்திரு மேனி கொள்ளும் நிலையும் என மூவகை நிலையும் இறை வனுக்கு உள என்பது அவர்கள் கண்டு உணர்த்திய உண்மையாகும். இறைவன் எடுக்கும் திருமேனி ஞான சரீரம் ஆகும். அது மாயையின் காரியம் போல மறைத்தலைச் செய்யாது. "பிறவா யாக்கைப் பெரி யோன்" என்ற தொடரில் பிறவா யாக்கை என்பது ஞான சரீரத்தைக் குறிக்க எழுந்த தொடராகும்.

உருவொடு தோன்றி நின்ருலும் எளிவந்து நின்று ஆன்மாக்கட்கு அனுக்கிரகஞ் செய்தாலும் ஒருநாளும் இறைவன் தனது எண்குணங்களுக்கு மாறுபட்ட நிலையை அடையமாட்டான் என்பதே சைவசமயத்தின் சிறந்த கோட்பாடாகும். பிட்டுக்கு மண்சுமந்ததைவிட எளிவந்த செயல் வேறிருக்கமுடியுமா? சிந்தித்துப்பாருங்கள் அன்பர்களே. தவிரவும் இறைவன் சிவம் சத்தி என ஒருமையில் இருமையாய் அமைந்திருப்பன் எனச் சித்தாந்தம் கூறுகின்றது. சூரியனும் கிரணமும்போல என இதனைத் தெளிந்து கொள்ளலாம். அதாவது சூரிய கிரணம் தன்னையும் உலகத்தையும் தன் முதலாகிய சூரியனையும் காட்டி நிற்கின்றது. அதுபோலவே சிவ சத்தியும் உலக உயிர்களையும் தன் முதலாகிய சிவத்தையும் ஆன்மாக்களுக்குக் காட்டி நிற்கும் என்பதாம். சத்தி என்பது வல்லமை (power). அது ஒரு குணம் (abstract) ஆகும். சிவம் என்பது வல்லமை என்ற குணத்தைப் பண்பாக உடைய முதற்பொருள் (concrete) ஆகும். ஒளியாய் ஒலியாய் உருவமாய் வரும் பெற்றியெல்லாம் உடையது சிவசத்தி. மாயையிற்பதிந்து பிரபஞ்சத்தை இயங்கவைத்து அதனை ஒழுங்கு தவருமல் நிர்வகித்து வருவதும் ஆன்ம உணர்வைக்கிளறி அதன் விருப்பப் படியே உலக வேட்கையை நிறைவேற்றி மெல்ல மெல்லத் தலைவனை உணருமாறு உபகரித்து நிற்பதும் அச் சிவசத்தியே.

"அத்தனுடன் ஆருயிர்கள்கூட அணைவிக்கும்சத்தி" என நமது சான்ருேர் கூறியுள்ளார்கள். இத்தகைய சத்தி சிவத்திலிருந்து தோன்றிச் சிவத்திலேயே ஒடுங்கும். ஆனல் சிவம் பிறிதொன்றிலிருந்து தோன்ருது எப்போதும் முழுமுதலாகவே நிற்கும். இறைவன் இந்த சத்தியின் மூலமாகத்தான் அங்கிங்கெனுதபடி எங்கும் வியாபித்திருக்கின்ருன்.

இனி, பொன்திரளும் அதனுற் செய்யப்பட்ட ஆபரணங்களும் நாம ரூபங்களால் வேறுபட்டுத் தன்மையால் (மாற்று—சுடச்சுடர்தல்) ஒன்ருகவே இருக்கும்.

அதுபோல இறைவனும் அவனல் எடுத்துக்கொள்ளப் பட்ட ஐந்தொழில் திருமேனிகளும் (பிர்ம்மா—விஷ்ணு — ருத்ரன் — மகேசன் — சதாசிவன்) நாமரூபங்களால் வேறுபட்டாலும் எண் குணங்களால் வேறுபடுவதில்லே. பராசத்தியின் துணேயால் இறைவன் ஒருவனே எண்ணிறந்த திருமேனி கொள்ளுகின்ருன் என நாம் உணர வேண்டும்.

இறைவன் ஒருவனே மூவரும் ஐவரும் எனத் திருமேனி கொள்வது உண்மையாஞல் மூவரில் இருவராகிய பிர்ம்ம விஷ்ணுக்கள் சண்டை யிட்டதும் ஒருவர் வந்து தேற்றியதும் எப்படிப் பொருந்தும் என்ற கேள்வி இயல்பாகவே எழுகின்றது. சைவசித்தாந்தம் இக்கேள்விக்குத் தெளிவான பதில் சொல்லுகின்றது. அது சொல்லும் பதில் இதுதான்: பிர்ம்ம விஷ்ணுக்களில் இருவகையுண்டு. பரமசிவமே பிர்ம்ம-விஷ்ணுவாகத் திருமேனி கொள்வது ஒருவகை. இந்தப் பிர்ம்ம விஷ்ணுக்களேக் காரணேசுரர் என்றும் சம்பு பக்ஷம் என்றும் ஆகமங்கள் கூறும். இந்தப் பிர்ம்ம விஷ்ணுக்கள் எப்போதும் எண்குணத்தாராகவே இருப்பர். இவர்கட்குள் எந்த மாறுபாடும் விளேந்ததில்லே. இவர்களேத்தான் "ஒருருவாயினே — மும்மூர்த்திகளாயினே" என்றெல்லாம் நூல்கள் கூறுகின்றன. இனி மற்ரெரு வகையாவது. ஆன்ம வர்க்கத்தில் அதிகார சத்தி புண்ணியம் என்ற புண்ணியத்தின் பயஞக பிர்ம்ம விஷ்ணு பதவியைப்பெற்று அண்டங்கள் தோறும் எண்ணிறந்தவர்கள் பிர்ம விஷ்ணுக்களாக இருந்து சிவபெருமான் ஆணே வழியே படைத்தல் முதலிய தொழில்களே நிறைவேற்றுவர். இவர்களேக் காரியேசுரர் என்றும் அணுபக்ஷம் என்றும் நூல்கள் கூறும். இவர்கள் ஆன்மவர்க்கத்தைச் சேர்ந்தவர்களாதலால் ஒரோவழி அகந்தை மேலிட்டு முரண்படுவது இயற்கையே. இந்த உண்மையைச் சைவ சமயிகள் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

## பசு (ஆன்மா)

ஆன்மா என ஒரு பொருளே இல்லையென்பர் லோகாயதர். தேகம், இந்திரியம், கரணம், மனம், பிராணவாயு இவை முதலான ஜடத்தையே ஆன்மா என்பர் ஒரு சாரார். பிரம்மம் ஆன்மா என்பன ஒரு பொருட் சொல்லெனக்கொண்டு இரண்டும் ஒன்றே யென்பாரும் உண்டு. சர்ஜேம்ஸ் ஜீன்ஸ் என்பவர், In other words, is a living cell merely a group of ordinary atoms arranged in some non-ordinary way, or is it something more? Is it merely atoms, or is it atoms plus life? or, to put it in another way, Could a sufficiently skilful chemist create life out of the necessary atoms, as a boy can create a machine out of "Meccano", and then make it go? we do not know the answer. என்று "Mysterious Universe" என்னும் நூலில் கூறுகிறார். ஆன்மா ஜடப் பொருளுமல்ல ஆண்டவனும் அல்ல என்பதே நாம் இங்குச் சிந்தித்து உணரவேண்டிய பகுதி.

உலகம் ஜடமாதலால் உலகத்தால் உலகத்திற்கு ஒரு பயனும் இல்லை. இறைவன் முற்றறிவும் முடிவி லாற்றலும் வரம்பிலின்பமும் உடையவனாதலின் அவ னுக்கு உலகத்தால் ஆகற்பாலதொன்றில்லை. அப்படி யானால் இந்த உலகம் யாருக்காக இயங்குகின்றது? உல கத்தைப் பயன்படுத்திக்கொள்ளும் பொருள் எது? என்ற வினாக்கள் இயல்பாக எழுகின்றன. இதுபோலவே வேத மும் இறைவனுக்குத் தேவையில்லை. உலகம் அறிவற்ற (அறிவித்தாலும் அறியமுடியாத) ஜடமாதலால் உலகத் திற்கும் பயன்படாது. அப்படியானால் வேதம் யாருக் காகத் தோன்றியது? அதனைப் பயன் படுத்திக்கொள் ளும் பொருள் எது என்ற கேள்விகளும் இயல்பாக எழுகின்றன. இவற்றுக்கெல்லாம் சைவ சித்தாந்தம் கூறும் மறுமொழி இதுதான். ஜடப்பொருளான

உலகமுமல்லாத பேரறிவினனான இறைவனுமல்லாத மூன்றுவது பொருளான ஆன்மாவே உலகத்தையும் வேதத்தையும் பயன்படுத்திக்கொண்டு முன்னேறும்.பிறர் அறிவிக்கவேண்டாது தானே முற்றறிவு உடையதா யிருப்பது கடவுட் பொருள். அறிவிக்க அறிவது ஆன்மா. அறிவித்தாலும் அறிய முடியாதது ஜடம். (ஜடம்-பிர பஞ்சம்) உலகமாகிய நாடகமேடையில் மனிதன் தன் பங்காகிய நாடகத்தைத் தான் நடிப்பதோடு ஏனைய நாடகங்களையும் காண்பவனாகின்றான். மற்ற பொருள்கள் போல மனிதன் இயங்கவில்லை என்பதை அறிஞர் உணர்வர். சூரியன், சந்திரன், விண்மீன்கள், பூமி முதலியன எல்லாம் இயங்குகின்றோம் என்ற உணர்வு கூட இன்றி ஓவாது சுழன்றுகொண்டே இருக்கின்றன. மனிதன் அந்த இயக்கத்தோடு இயங்கிக்கொண்டே எதிர்த்து நின்று தன்னைத்தவிர மற்றவற்றையெல்லாம் அளந்து அறிந்து பயன்படுத்திக்கொள்ளும் தகுதி பெற்றிருக்கின்றான். இந்த மனித சக்தி (அறிவாற்றல்) எப்படி அவனுக்கு உண்டாயிற்று? ஜடத்துவத்திலிருந்து இப்படிப்பட்ட ஆற்றல் உண்டாக முடியுமா? முடியவே முடியாது. அப்படியானால் ஜடத்துவமல்லாத ஆற்றல் தான் உயிராற்றல் என நாம் ஒப்புக்கொள்ள வேண்டிய தாகின்றது. இதனை Neo Vitalisam என மேனாட்டு அறிஞர் சிலர் யூகத்தால் முடிவு செய்தனர். எனவே ஆன்மா ஜடப்பொருளல்ல என்பதும் நுண்ணிய அறி வாற்றல் வடிவான வேறு பொருளே என்பதும் இங்கே நாம் சிந்திக்கவேண்டியதாகும்.

இனி ஆன்மாவைப்பற்றிச் சைவ சித்தாந்திகள் கூறு வது என்ன என்பதைக் காண்போம். ஆன்ம நிலையை நாம் நன்றாகப் புரிந்துகொள்வதற்காக மூன்று உவமை கள் சித்தாந்த நூல்களில் கூறப்படுகின்றன. பூவில் மணம் - இருள் ஒளியலாக் கண் - பன்னிறம் காட்டும் படிகம் என்பனவே அவ்வுவமைகள். ஆன்மா என ஒரு பொருள் உண்டு என உணரலாமே ஒழிய அதனைப்

பிரித்தோ தனித்தோ காண முடியாது என்பதே பூவில் மணம் என்ற உவமையால் தெரிவிக்கப்படும் கருத்து ஆகும். பூவேறு மணம் வேறே ஆயினும் மணத்தைப் பிரித்துக் காணமுடியாதவாறுபோல, உடல்வேறு உயிர் வேறே ஆயினும் உயிர் பிரித்துக் காணமுடியாத நிலை யில் இருப்பதை நாம் உணர்கிறோம்.[1] மின்சாரம் கண்ணுக்கோ, கருவிகட்கோ புலனாகாது. ஆனால் அதன் தொழிற்பாட்டை நாம் நன்கு அறிகிறோம். மின்சாரம் என்றால் என்ன என்பதற்குப் பெர்ட்ரண்டு ரஸ்ஸல் என்ற அறிஞர் பின்வருமாறு பதிலளிக்கிறார்.

"மின்சாரம் என்பது ஸெயின்ட் பால்ஸ் கெதீட்ரல் போன்றதொரு பொருளன்று. மின்சாரத்தில் பொருள் கள் இவ்வாறு இயங்கும். பொருள்களில் மின்சக்தி யைச் செலுத்தினால் அவை இம்மாதிரியான மாறுதலை அடையும், இன்ன இன்ன சந்தர்ப்பங்களில் பொருள் களில் மின்சக்தியைப் பாயவிட முடியும் என்பது போன்ற விஷயங்களைத்தான் நாம் பிறர்க்குச் சொல்ல முடியுமே தவிர மின்சாரம் என்பது என்ன என்பதைத் திட்ட வட்டமாகச் சொல்ல முடியாது".

மின்சாரம் போன்றதே உயிராற்றலும் என மெய் யுணர்ந்தோர் கூறுகின்றனர். எனவே பிரித்தோ தனித்தோ காணமுடியாத காரணத்திற்காகவே ஒரு பொருளை இல்லையென்று வாதிப்பது பொருந்தாது என இதனால் அறிகிறோம், இனி இரண்டாவது உவமை யாகிய "இருள் ஒளியலாக் கண்" என்பதைச் சிந்திப் போம். கண்ணுக்குத் தன் தன்மையென்பது ஒன்றில்லை. இருளோடு சேர்ந்தால் இருளாகியும், ஒளியோடு சேர்ந்தால் ஒளியாகியும் இரட்டைத்தன்மையுடையதாக இருக்கின்றது கண். கண்ணுக்கு ஒளி இயற்கையானால்

---

1. "தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது
தோன்றல் மலர்மணம்போல் தொக்கு"
என்பது சிவஞான போதம்.

இருளிலும் பொருள்களைக் காண வேண்டும். அல்லது கண்ணுக்கு இருள் இயற்கையானுல் ஒளியைச் சார்ந்த போதும் காணமாட்டாத நிலையில் இருக்கவேண்டும். ஒளியோடு கூடினுல் ஒளிபோலாகிப் பொருள்களைக் காண்பதும் இருளோடு கூடினுல் இருள்போலாகிப் பொருள்களைக் காண முடியாது நிற்பதும் ஒரு விசித்திர மான நிலையல்லவா? இதுபோலவே ஆன்மாவும் பாசத் தோடு சேர்ந்தால் பாசம்போலவும் பதியினைச் சார்ந் தால் பதிபோலவும் மாறக்கூடிய இரட்டைத்தன்மை வாய்ந்தது என்பதே இவ்வுவமையால் நாம் விளங்கிக் கொள்ள வேண்டியதாகும். இந்நிலையைச் சார்ந்ததன் வண்ணம் என்று நூல்கள் கூறும். அதாவது உலகத் தைச் சார்ந்து கிடைத்த உடம்பின் தகுதிக்கேற்றவாறு உலகத்தையும் அனுபவிக்கும். அதே ஆன்மா காலக்கிர மத்தில் இறைவனைச் சார்ந்து பேரின்பத்தையும் அனுப விக்கும் என்பதாம்.

"அசத்திது சத்திது என்ருேர் - சத்திருள் ஒளியலாக் கண் தன்மையதாம்" என்பது சிவப்பிரகாசம். இனி எஞ்சி நிற்பது பன்னிறங் காட்டும் படிகம் என்பது.படிகம் என்பது கண்ணுடியன்று; "Crystal" என ஆங்கிலத்தில் கூறப்படுவதே படிகமாகும். கதிரவன் கிழக்கே அல்லது மேற்கே சாய்ந்திருக்கும்போது தனக்குக் கீழே எந்த நிறப் பொருளிருந்தாலும் அந்த நிறம் படிகக்கல் முழுவ தும் ஊடுருவித் தோன்றும். அப்போது படிகத்தின் நிறமே தோன்ருது. ஆனுல் கதிரவன் நேர் உச்சியில் இருக்கும்போது படிகக்கல்லின்கீழ் எந்தநிறப் பொரு ளிருந்தாலும் அந்த நிறங்கள் அக்கல்லின்கண் ஊடுருவித் தோன்றுவதில்லை. தன் வண்ணமாகவே ஒளி யோடு ஒளியாகச் சேர்ந்து தோன்றும். இதுபோலவே ஆன்மாவும் திருவருட் சந்நிதியை நீங்கியிருக்கும் சமயத் தில் பாசம் அதனைத்தாக்க, தான் பாசப்பொருள் போலாகித் தன்னைப் பாசமாகவே உணரும். ஆனுல் திருவருட் சந்நிதியை நேர்பட்ட காலத்தில் பாசப்

பொருள்களாகிய கருவிகரணங்கள் அதனைத் தாக்க மாட்டா. அப்போது ஆன்மா ஒளியோடு கூடிய ஒளிப் பொருள் போலத் தன்வண்ணமாய்த் தனது நிலையை உணரும்.

"உச்சிக்கதிர்ப் படிகம் ஒவ்வுநாள் எந்நாளோ" எனத் தாயுமானவர் பாடலும், "பொழுதேறுங் காலத்தும் சாயங்காலத்து மன்றி உச்சிக் காலத்தில் பஞ்ச வன்னங்களையும் கவராத வழக்கம்போல" என ஒழிவிலொடுக்க உரையும் படிகத்தின் தன்மையை விளக்குதல் அறியத்தக்கதாகும்.

இதுகாறும் உவமைகள் மூலம் சிந்திக்கப்பட்ட ஆன்மாவின் இலக்கணத்தைப் பொதுவகையால் இனி சிந்திப்பது இன்றியமையாதது. அணுவாய் அருவாய்-அறிதல்-இயற்றுதல்-நுகர்தல் என்ற மூன்று குணங்களைப் பிரதிபலிப்பதாய் எண்ணிறந்தனவாய் இருப்பது ஆன்மா எனப் பொதுவகையால் உணர்த்தப்பெற்றுள்ளது.[1] மேலே சொல்லிய அறிதல், இயற்றுதல், நுகர்தல் என்ற மூன்றனையும் ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்தி எனச் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன. புழு உடம்பைச் சார்ந்தால் புழுப்போலவும் பறவை உடம்பைச் சார்ந்தால் பறவை போலவும் விலங்குடம்பைச் சார்ந்தால் விலங்கு போலவும் மனித உடம்பைச் சார்ந்தால் மனிதன் போலவும் நடக்கின்றது ஆன்மா. ஆன்மாக்கள் அனைத்தும் தன்னியல்பில் ஒரே படித்தானவைதான். ஆனால் அவைகட்குக் கிடைத்த உடம்பு வேறுபாடு காரணமாகத்தான் ஊர்வன - நீர் வாழ்வன-பறப்பன - நடப்பன எனச் சாதி வேறுபாடுகள் உண்டாகின்றன. இவ்வுலகத்துக் காணப்படும் உயிர்ப் பன்மைகள் ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு உயிர்வரை படி முறையாக வைத்தெண்ணப்படுவதை நாம் அறிவோம். இதுபோலவே இவ்வுலகத்தினும் மேம்பட்ட பகுதியில் வாழும் உயிர்ப்பன்மைகள் உண்டு எனவும்

1. பசுவின் உரோமத்தை நூறாயிரம் கூறிட்டால் அவற்றுள் ஒரு கூறே ஆன்ம அணுவிற்கு உவமையாம்

அவை பிரளயாகலர் விஞ்ஞானகலர் என ஒன்றின் ஒன்று உயர்ந்த தகுதியுடையன எனவும் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

## பாசம்: ஆணவம்.

ஆணவம் என்பது ஓர் மறைப்புச்சத்தி. அஃது ஆன்ம அறிவு முழுவதையும் மறைத்துக்கொண்டு ஆன்மா பிற பொருளைக் காணவொட்டாமல் தடுத்து நிற்பது. அன்றியும் தன்னால் மறைக்கப்பட்ட அவ்ஆன் மாவிற்குத் தன்னையும் காட்டாத வல்லபம் உடையது அவ்வாணவம். உலகத்து இருள் பிறபொருள்களை மறைத்துத் தன்னையாவது காட்டும். ஆனால் ஆணவ இருளோ பிற பொருள்களையும் மறைத்துத் தன்னையும் மறைத்துக் கொள்ளும் வியப்புடையது என

"ஒரு பொருளுங் காட்டா திருளுருவம் காட்டும்
இரு பொருளும் காட்டா திது"

என்ற திருவருட்பயன் கூறுகின்றது. ஆணவமலம் என்ற இம் மறைப்புச்சத்தி, பொருளால் ஒன்றே ஆயி னும் ஆன்மாக்கள்தோறும் மறைத்திருக்கும் வன்மை மென்மை வேறுபாடுகளால் எண்ணரிய சத்திகளை யுடையதாகும். உயிர்கட்குப் பிறவி வேறுபாடுகள் உண்டாவதற்கு இந்த ஆணவ மலத்தின் வன்மை மென்மைபற்றிய வேறுபாடுகளே காரணம். அதாவது ஆணவமலம் மிகவும் வன்மையாகப் பொருந்திய உயிர் ஓரறிவு உயிராக உடம்பினைப் பெறும். சிறிது வன்மை யாகப் பொருந்திய உயிர் பறவை உடம்பினைப்பெறும். இனி அவ்வாணவ மலம் சிறிது மென்மையாகப் பொருந் திய உயிர் விலங்குடம்பினைப் பெறும். அதுவே மென்மையாகப் பொருந்திய உயிர் அறிவுசான்ற மக்கள் உடம்பினைப் பெறும். இவ்வாறு பொருந்தியுள்ள இவ்வாணவமலத்தின் வல்லபமெல்லாம் கெட்டொழியும்

காலமே ஆன்மாக்கள் ஞானிகளாக விளங்குதற்கேற்ற காலமாகும். இந்தநிலை மலபரிபாகம் எனச் சித்தாந்த நூல்களில் குறிக்கப்பெறுகின்றது. இனி ஆணவம் என்பது அறியாமையன்று. ஆன்மா அறிவினை உடையது. அறிவு மறைக்கப்பட்ட நிலையில் இருக்கிறது. மறைப்பை நீக்கி முற்றறிவை அறியும்படி உபகரிப்பது திருவருள்.

## பாசம்: கன்மம்.

ஆன்மாக்கள் தம்மை நோக்கியும் பிற உயிர்களை நோக்கியும் இறைவனை நோக்கியும் செய்யும் செயல்களெல்லாம் கன்மம் அல்லது வினை எனப் பெயர் பெறும். பொருளீட்டுதல் கல்வி கற்றல் முதலியன தம்மை நோக்கிச் செய்வன. அறம் செய்தல் பிற உயிர்களை நோக்கிச் செய்வன. இறைவனை வழிபடுதல் இறைவனை நோக்கிச் செய்வன. இங்கே வினை என்பன மனத்தால் நினைப்பதும் வாக்கினால் சொல்வதும் உடம்பினால் செய்வதும் என்ற மூன்றனையும் உளப்படுத்தி நிற்பன. நினைவிற்கும் ஆற்றல் உண்டு, பயன் உண்டு என்பது அனைவரும் அறிந்ததே. பிற உயிர்கட்குச் செய்யும் நன்மைகள் நல்வினை எனப்பெற்றுப் பிற்காலத்தில் இன்பத்தை விளைவிக்கும். அவ்வாறே பிற உயிர்கட்குச் செய்யும் தீமைகள் தீவினை எனப்பெற்றுப் பிற்காலத்தில் துன்பத்தை விளைவிக்கும். பிறவிதோறும் நம்மால் ஈட்டப்பெற்ற கன்மங்கள் மலைபோலக் குவிந்து சஞ்சிதம் என்னும் பெயரால் புத்தி தத்துவத்திற் கிடக்கும். அவ்வினைகளுள் குறிப்பிட்ட அளவு இந்த உடம்பில் நாம் அனுபவிக்கும்படி திருவருள் நியதி செய்திருக்கும். அப்படி நியதிசெய்யப்பெற்ற வினைக்குப் பிராரத்துவம் அல்லது ஊழ் என்பது பெயராகும். திருவருள் நியதியின்படி முன்பு செய்த வினையின் பயனையே இந்தப் பிறவியில் நாம் அனுபவிக்கிறோம். இப்பொழுது செய்வன இன்னும் வினைப்பட்டியலில் போய்ச்சேரவில்லை.

முன்செய்த வினைப்பயனை அனுபவிக்கும்போது இன்பம் விளையுங்கால் மகிழ்ச்சிமீதூர்ந்தும் துன்பம் விளையுங்கால் வெறுப்புமீதூர்ந்தும் ஏதாவது செய்துவிடுகிறோம். இன்பம் விளையும்போது உண்டாகும் மகிழ்ச்சியும் அதன் எதிர் விளைவுகளும் நல்வினை என மீண்டும் முளைக்கின் றன. அல்வாறே துன்பம் விளையும்போது உண்டாகும் வெறுப்பும் அதன் எதிர் விளைவுகளும் தீவினை என மீண் டும் முளைக்கின்றன. முன்செய்த வினையை அனுபவிப்ப தற்காக இந்த உடம்பு கிடைத்தது. அந்த வினையை அனுபவிக்கும்போது சமநிலையில்லாமையான் மீண்டும் நல்வினை தீவினை கிளைத்து மற்றோருடம்பிற்கு வித்தாகி விடுகின்றது. இவ்வாறே நாம் இடையறுது வினையும் பிறவியுமாய் அல்லற்பட்டு வருகின்றோம். "காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின்" எனப் பரிமேலழகர் கூறுவது இங்கே சிந்திக்கத்தக்கது. ஒவ் வொருவர் பேராலும் மலைபோலக் குவிந்துகிடக்கும் வினைக்குச் சஞ்சிதம் என்றும், இந்த உடம்பில் அனுப விப்பதற்காக வரையறை செய்யப்பட்ட வினைக்குப் பிராரத்துவம் என்றும் பிராரத்துவத்தை அனுபவிக்கும் போது உண்டாகும் விருப்பு வெறுப்புகளுக்கு ஆகாமியம் என்றும் நூல்களில் பெயர்கள் வழங்கப் பெறுகின்றன. இனி வினைப்பயன்களை இன்னசாதியில் இவ்வளவு வாழ் நாளில் இன்னின்ன போகமாக இவன் அனுபவிப்பானுக என ஒவ்வொருவருக்கும் திருவருள் நியதி செய்கின்றது.

'பேறிழ வின்பமோடு பிணிமூப்புச் சாக்காடென்னும்
ஆறுமுன் கருவுட்பட்டது"

எனச் சித்தியார் கூறுவது காண்க.

உழவு தொழிலை ஏற்றுக்கொண்டு விளையுளைக் கொடுப்பதற்கு வயல் இன்றியமையாதவாறுபோல ஆன் மாக்கள் செய்யும் வினைகளை ஏற்றுக்கொண்டு அவற்றை அளந்தறிந்து பயன் வழங்கத் திருவருள் நியதி இன்றி யமையாததாகின்றது. தான்செய்த தீவினைப் பயனி

விருந்து தப்பித்துக்கொள்ளவும் பிறர்செய்த நல்வினைப் பயனைக் கவர்ந்து கொள்ளவும் அரிது முயல்வதே உயிரியல்பு. இவ்வியற்கைக்குத் தடையில்லையானல் இதுகாறும் உலகம் இயங்கிவந்திருக்காது. வலியாருக்கு மெலியார் இரையாகி உலகம் சூனியமாகியிருக்கும். ஏதோ ஒரு சக்தி உலகத்தைக் கண்காணித்துத் தீமையை விஞ்சவிடாமல் தடுத்து வருகின்றது என்பதை உணர்வுடையார் உணருவர். வினை ஜடம். அது தானகச் செய்தவனைத் தேடி அலையமுடியாது. ஆன்மா சுதந்திர ஆற்றல் இல்லாதது. அதனல் தானே தான்செய்த வினையைத் தேடிச் சேர்த்துக்கொள்ள வாய்ப்பில்லை. ஆகவே சிவசத்திதான் வினைப்பயனை ஆன்மாக்கட்குச் சேர்ப்பது என முன்னோர் எடுத்துக்காட்டினர்.

இனி நல்வினை எனப்படும் புண்ணியம், பசு புண்ணியம், பதி புண்ணியம் என இரண்டு பிரிவாகும். ஆன்மாக்களையே நோக்கித் தெய்வத்திருவருள் உணர்வின்றிச் செய்யும் நல்வினைகள் பசு புண்ணியம் எனப் படும். தெய்வத்திருவருளுணர்வோடு தெய்வத்தை வழி படுவதும் அவ்வுணர்வோடு ஆன்மாக்கட்கு நன்மை செய்வதும் சிவபுண்ணியம் எனப்பெறும். பசு புண்ணியம் உலக போகத்தைமட்டும் கொடுக்க வல்லது. சிவ புண்ணியமோ உலக போகத்தையும் முடிவில் பேரின்ப வீட்டையும் தரவல்லது.

## பாசம்: மாயை.

மாயை பிரபஞ்சத்திற்கு மூலகாரணமான முதற் பொருள். மண்ணிலிருந்து குடம் தோற்றுவிக்கப் பட்டதுபோல மாயையிலிருந்து பிரபஞ்சம் தோற்றுவிக்கப் பட்டது. மாயை அனைத்தும் பிரபஞ்சமாக விரிந்து விடாமல் அதன் ஒரு கூறுதான் பிரபஞ்சமாக விரிந்து மீண்டும் ஒடுங்குகின்றது என்பதும் இங்கே சிந்திக்கத் தக்கது. ஒரே முதலாய் — அழிவில்லாததாய்-- அருவப்

பொருளாய் - உயிர்கட்கு உடம்பு கருவி கரணங்கள் புவனம் போகம் முதலிய அனைத்துமாய் இறைவனுக்கு வைப்புச்சத்தி என்னும் பெயருடையதாய் இருப்பது மாயையின் பொது இலக்கணமாகும். மாயைக்கு இறைவனைத் தவிர வேறு ஆதாரம் இன்மையானும் இறைவனையின்றி மாயைக்குத் தொழிற்பாடு இன்மையானும் மாயையில் தோன்றி ஒடுங்கும் பிரபஞ்சம் உபசாரமாக இறைவனிடத்தில் தோன்றி ஒடுங்கியதாகத் தோத்திரங்களில் கூறப்பட்டுள்ளது. இறைவனோ அவனது சிற்சத்தியோ ஒருகாலும் மாயையாகப் பரிணமிப்பதில்லை. இறைப் பொருளும் மாயையும் ஒளியும் இருளும் போல அடியோடு மாறுபட்ட தன்மையுடையன. இப்படிப்பட்ட மாயை, ஆணவ இருளிற் கிடக்கும் ஆன்மாக்கட்கு விளக்குப்போல சிறுச்சிறிதே அறிவு விளக்கத்திற்குத் துணையா யிருக்கிறது. சரீரச் சார்பால் ஆன்மா அறிவு வளர்ச்சியடைவதை நமது அனுபவத்தில் உணருகிறோம். ஆனால் ஞானசத்தி ஆன்மாவிற் பதியும் வரையில்தான் மாயையின் உபகாரம் ஆன்மாவிற்குப் பயனுள்ளதாக இருக்கும். ஞானப்பேரொளி பதிந்த பின்னரோ ஆன்மா பேரறிவினை அறிந்து அனுபவிக்குமாதலால் அக்காலத்துக் கருவி கரணங்கள் பகல் விளக்குப்போலப் பயனற்றன ஆகிவிடும்.

சிவதத்துவம் வித்தியாதத்துவம் ஆன்மதத்துவம் என மாயை மூவகையாக முறையே ஒன்றனுக்கு ஒன்று தூலமாகப் பயன்படுகிறது. இவற்றைச் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை எனவும் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன. "மூவகை உலகமும் முகிழ்த்தன முறையே" என்ற இடத்து மூவகை உலகம் என்பது மேலே சொல்லியவற்றைத்தான் குறிக்கும். சிவதத்துவம் அல்லது சுத்தமாயை நேரே பராசத்தியால் இயக்கப்பெறுவது. சுத்தமாயையில் பராசத்தி பதிந்த போது உண்டானது நாதம். நாதம் பதிந்ததால் உண்டான புள்ளி அல்லது வடு விந்து. இது ஒளியாகவும் ஒலி

யாகவும் அமைந்து உலகத்தையே இயக்குகின்றது. ஐந்தொழில் இயற்றும் தலைவர்கட்குச் சரீரம் முதலியன வாகவும் சரியை, கிரியை, யோகம் முதலிய நெறிகளில் நின்றோர்க்குப் பதமுத்தித் தானமாகவும் ஆன்மாக்கள் சுத்தாவஸ்தையில் அறியத்தக்கதாகவும் இருப்பது சுத்த மாயை. தயாபர கரும சாதாக்கியர் எனப்படும் மகா சதாசிவர் வீற்றிருப்பதும் இந்தத் தானத்தில்தான், மின்சாரக்குமிழ் போல சுத்தமாயையும் மின்சாரம்போல சதாசிவரும் இயைந்து உலகத்தை இயக்குவதாகச் சித் தாந்த நூல்கள் கூறுகின்றன,

காலம் - நியதி - கலை - வித்தை – அராகம் - மாயை - புருடன் எனச் சுத்த வித்தியா தத்துவம் ஏழு. ஆன்மா அனாதியில் ஆணவமலத்தோடு அழுந்திக் கிடந்தது. நள் ளிருளில் அலரவிழித்த விழி எப்படி பார்க்கும் தொழிலைச் செய்யமுடியாதோ அப்படி ஆன்மாவிற்கு அறிவிருந்தும் அறிவைப் பயன்படுத்தும் வாய்ப்பேதுமின்றிக் கிடந்த அந்நிலையில் திருவருட் சத்தி காலம் - நியதி - கலை - வித்தை - அராகம் என்ற தத்துவக் கரத்தால் தீண்டி ஆன்மாவைப் பஞ்சகஞ்சுகனாக ஆக்கிற்று. கலை என்ற தத்துவம் பதிந்தபோது ஆன்மாவினுள் ஒரு உணர்ச்சி தோன்றி நாம் ஒருபொருள் என்று உணர ஆரம்பித்தது. வித்தை பதிந்தபோது ஆன்மா தனக்கு அறியும் ஆற்றல் உண்டு என்பதை உணர்ந்தது. அராகம் என்ற தத்து வம் பதிந்தபோது தனக்கு நுகரும் ஆற்றல் உண்டு என்பதை உணர்ந்து சிறிதே விழிப்புற்றது. ஆன்மா செய்யும் வினைகளை அளந்து கணக்கிடுவதற்காகக் கால தத்துவம் பதிந்தது. தான்தான் செய்வினையைத் தானே அனுபவிக்கும்படி கட்டுப்படுத்துவதற்காக நியதி என்ற தத்துவம் பதிந்தது. காலம் – நியதி - கலை - வித்தை - அராகம் என்ற இவ்வைந்தும் பதிந்த பின்னர் ஆன்மா விற்குப் பஞ்சகஞ்சுகன் என்ற பெயருண்டாயிற்று. ஆன்மா பரமுத்திக்குப் போகும்வரை இந்தப் பஞ்சகஞ் சுகம் என்னும் உறை அதனைவிட்டு நீங்குவதில்லை என்

பது சான்ருேர் அனுபவ வாக்கு. இவையனைத்தும் குறிப்பேடுபோல ஒவ்வொரு ஆன்மாவிற்கும் திருவருட் செயலால் அமைந்துள்ளது என்பதையும் இவ்வாறு ஆன்மாவைப் பக்குவப் படுத்தாவிட்டால் அது பிரகிருதி மாயையை அனுபவிக்கும் யோக்கியதையைப் பெருது என்பதையும் சித்தாந்த நூல்கள் தெளிவாக்குகின்றன.

இனி ஆன்மதத்துவம் அல்லது பிரகிருதி மாயை கலையிலிருந்து முக்குண வடிவாய்த் தோன்றியது. மனம்-புத்தி - சித்தம் - அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் நான்கு, தன் மாத்திரைகள் ஐந்து, தூல பூதங்கள் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து ஆக இருபத்து நான்கு தத்துவங்கள் இவை பொது வாக அனைத்துச் சமயவாதிகளாலும் ஒப்புக்கொள்ளப் படுவன. எனினும் பஞ்சபூதத் தோற்றத்தைப் பற்றி ஏகான்மவாதிகள் சொல்வன பொருத்தமற்றதாக இருக் கின்றது. ஆகாயத்திலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து மண் ணும் தோன்றியது என்பது அவர்கள் கூற்று. ஒன்றி லிருந்து ஒன்று நேரே தோன்றினல் அவை யிரண்டும் குணத்தால் மாறுபடமுடியாது. ஆகாயம் ஓசை என்னும் பண்பினை உடையது. காற்று ஓசையோடு ஊறு என் னும் பண்பும் சேர்ந்து இரண்டு பண்புகளை உடையது. தீ ஓசை, ஊறு, ஒளி என மூன்று பண்புகளை யுடையது. ஆதலால் இவை ஒன்றிலிருந்து ஒன்று தோன்ற முடியாது. ஒரே பண்பினையுடைய ஆகாயத்திலிருந்து இரண்டு பண்புகளையுடைய காற்று தோன்ற முடியா தென்பது வெள்ளிடை மலை. இங்கே சைவ சித்தாந்தம் என்ன கூறுகின்றது என்பதனையும் காண்போம்- பஞ்ச பூதத் தன்மை சமத்துவமாகக் கலந்துள்ள அவ்வியக்தம் என்ற பொருளிலிருந்து ஒலி அணு, வளி அணு, தீயணு நீரணு, மண் அணு என்ற ஐந்து தன்மாத்திரைகள் தோன்றின. ஒலி அணு முதலியவற்றைத் தன் மாத் திரைகள் என்று சித்தாந்தக் கட்டளைகள் கூறும். பஞ்ச

பூதத் தன்மை சமநிலையாகக் கலந்துள்ள தைசதஅகங் காரத்திலிருந்து ஆகாயத் தன்மை பெருகியும் ஏனைய பூதங்களின் தன்மை அடங்கியும் இருக்கும் சப்த தன் மாத்திரை தோன்றியது. அவ்வாறே அந்த அகங்காரத்தி லிருந்து காற்றின் தன்மை பெருகியும் ஏனைய பூதங் களின் தன்மை அடங்கியும் இருக்கும் ஸ்பரிச தன்மாத் திரை தோன்றியது. தீயின் தன்மை பெருகி ஏனைய பூதங்களின் தன்மை அடங்கியும் இருக்கும் ரூபதன் மாத்திரையும் இம்முறையே இரச தன்மாத்திரையும் கந்த தன்மாத்திரையும் தோன்றின. பின்னர் சப்த தன் மாத்திரையிலிருந்து ஆகாயமும், ஸ்பரிச தன்மாத் திரையிலிருந்து காற்றும், ரூபதன்மாத்திரையிலிருந்து நெருப்பும், இரச தன் மாத்திரையிலிருந்து நீரும், கந்த தன்மாத்திரையிலிருந்து மண்ணும் உண்டாயின. சீகண்ட ருத்திரர் என்ற பெயருடையவர் கலை என்ற தத்துவத் தைக் கலக்கி இவ்வாறு இருபத்து நான்கு தத்துவங் களையும் தோற்றுவித்துத் தொழிற்பட வைத்தார் என்று சித்தாந்தக் கட்டளைகளில் கூறப்பட்டுள்ளது.

இது நிற்க, மாயாகாரியமான பிரபஞ்சம் ஒலிவடி வானது, பொருள் வடிவானது என இரு கூருக அமைந் துள்ளது. எழுத்து - பதம் - மந்திரம் என்ற இவை ஒலி வடிவானவை. கலை - தத்துவம் - புவனம் என்ற இவை பொருள் வடிவானவை. இவை ஆறும் அத்துவா எனப் படுவன. அத்துவா என்பது மார்க்கம் அல்லது வழி எனப் பொருள்படும். இவற்றின் வழியாகத்தான் ஆன்மா பரமசிவத்தின் அருள் வெளியை எட்டிப் பார்க்க முடியும் என்பதே அத்துவா என்பதன் கருத்தாகும். தத்துவ ஆய்வு என்ற தலைப்பின்கீழ் பதி - பசு - பாசம் என்ப வற்றைப் பற்றி ஒரு சிறிது இங்கே சிந்திக்கப் பெற்றது.

ஆன்மா இவ்வுடம்போடு கூடியிருப்பதில் மகிழ்ச்சி அடைகின்றதே தவிர உண்மையில் வெறுப்போ வருத் தமோ அடையவில்லை. தாங்கமுடியாத துன்பக்காலத்தில்

ஒரோவழி உடம்பை விட்டுவிட நினைத்தாலும் மற்றக் காலங்களிலெல்லாம் பற்றுச் செய்தே வருகின்றது என்பது கண்கூடு. அதற்குக் காரணம் என்ன? இதனினும் கேடாக இருந்த முன்னைய நிலையை நோக்க இந்த நிலை உயர்ந்தது என்பதுதான் காரணமாக இருத்தல் வேண்டும். இவ்வாறு மனித உயிர்கள் மட்டுமின்றிப் புழு முதலிய உயிர் வர்க்கங்களும் கூட மகிழ்ச்சியோடுதான் உலாவுகின்றன. "புழுவிற்கும் குணம் நான்கெனக்கும் அஃதே" என்பது அப்பர் சுவாமிகள் வாக்கு. உண்டி-உறக்கம்-பயம்-இன்பம் என்ற இவையே குணம் நான்கு எனக் குறிக்கப்பெற்றன. புழுவாய்ப் பிறந்த உயிரும் மகிழ்ச்சியோடிருக்குமானால் அவ்வுயிர் புழு உடம்பைப் பெறுமுன் அதனினும் கேடான நிலையில் தானே இருந்திருக்க வேண்டும். புல் பூண்டு முதலிய ஓரறிவு உயிரும் இவ்வாறே அவ்வுடம்பும் கிடைக்கப் பெரு திருந்திருக்க வேண்டும். இப்படியே சிந்தித்துச் சென்றால் ஒரு காலத்து ஆன்மாக்கள் முழு அறியாமையில் கிடந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. அப்படியிருந்த நிலையைக் கேவலநிலை என நூல்கள் கூறுகின்றன. அப்போது ஆன்ம அறிவு முழுதும் மறைக்கப்பட்டு அறிவதற்குத் துணையான கருவி கரணங்களோ போக்குவரவு புரியப் புவனமோ இன்பம் துன்பம் முதலிய போகமோ ஒன்றும் இல்லாத நிலையில் கிடந்தது என்பதை ஊகத்தால் உணரலாம். அவ்வாறு ஆன்ம அறிவை மறைத்த பொருள்தான் ஆணவம் எனப் பெயர் பெற்றது. முழு அறியாமைக்காளாகி இருந்த ஆன்மா இப்போது அறிவு அறியாமை இரண்டனையும் அனுபவித்து வருகிறது. ஒரு துறையில் பேரறிஞராயிருப்பவர் பிறிதோர்துறையில் ஒன்றுமே அறியாதவராயிருக்கிறார். அறிந்தவற்றையே மறந்து மறந்து மீண்டும் மீண்டும் நினைவுகூரவேண்டி யிருப்பதையும் அனுபவத்தில் காண்கிறோம். கண்வழியே ஒன்றனைக் கூர்ந்து நோக்கும்போது செவிப் புலனால் ஒன்றை அறிய முடிவதில்லை. குறிப்பிட்ட தூரத்துக்

குட்பட்டவற்றைத்தான் பார்த்தல் கேட்டல் முதலிய வற்ருல் நாம் அறிய முடியும். வாஞெலிப் பெட்டிக் கிருக்கும் வல்லமைகூட நமக்கில்லை. இவையெல்லாம் மனிதனின் குறை நிலையைக் காட்டுவனவாகும். இவற்றி லிருந்து நிறைவு நிலை என ஒன்று உண்டு என்பதும் அதனையடைய வேண்டியதே ஆன்மாவின் குறிக்கோள் என்பதும் புலஞகும். அதனையே முத்தி எனத் தத்துவ நூல்கள் கூறுகின்றன.

## முத்தி நிலை.

இனி, சைவ சித்தாந்திகள் கூறும் முத்திநிலை யாதெனக் காண்போம். ஆன்மா அடையவேண்டிய உயர்ந்த நிலையாகிய பேரின்ப வாழ்வினைத்தான் முத்தி எனத் தத்துவ நூல்கள் கூறுகின்றன. ஆன்மவளர்ச்சி மனித உடம்பைச் சாதனமாகக் கொண்டு ஆன்மா திருவருளிற் கலந்து பரிபூர்ண நிலையை அடைத லாகும். மனித உடம்பிற்கு மேம்பட்ட உடம்பு இனி உண்டாகப்போவதில்லை என விஞ்ஞானிகள் முடிவுகட்டிவிட்டனர். எனவே மனித வாழ்வினைவிட உயர்ந்தநிலை ஒன்று இருக்குமாஞல் அதனை மனவளர்ச்சி யால்தான் அடையமுடியும் எனக் கூர்த்தமதியாளர் ஒப்புக்கொள்கின்றனர். இவ்வுடம்பிற் கலந்து நின்று ஆடிப்பாடி ஒய்ந்து மாய்ந்து விடுவது மனித உடம்பைப் பெற்றதன் பயஞகாது. மனித வாழ்வின் மேம்பட்ட தோர் அமர வாழ்வு நிச்சயம் உண்டென்பதை உலக ஆரவாரங்களின் நீங்கித் தெளிந்த சிந்தனையாளர் அனைவரும் ஒருமுகமாக ஒப்புக்கொள்கின்றனர். அத் தகைய அமர வாழ்வைப் பெறவேண்டும் என்ற உள் ளுணர்வு எல்லா ஆன்மாக்களுடைய உள்ளத்திலும் அடித்தளத்தில் இருக்கத்தான் செய்கிறது. உலக சுக போகங்களால் ஆன்மா சாந்தி அடையவில்லை என்பதைப் பல்வேறு நாட்டில் பல்வேறு காலத்தில் தோன்றிய செம்மனச் செல்வர்கள் வரலாறு எடுத்துக் கூறுகின்றது.

செல்வத்துறையிலும் கலைத்துறையிலும் சிறந்து பெரும் புகழோடு விளங்கிய டால் ஸ்டாய் என்ற ரஷ்ய நாட்டுப் பெரியவர் தனது ஐம்பதாவது வயதில் அவையனைத்தும் பயனற்றவை எனக் கண்டார். கலை என்பது மூடர்களின் லீலை அல்லது சோம்பேறிகளின் சுகபோக வாழ்க்கைக் குரியது எனவும், புகழ் என்பது உள்ளீடற்ற வெறுமை எனவும் கருதித் தெளிந்த சிந்தையோடு மன்பதைக்குத் தொண்டு செய்யும் ஆர்வக்கனல்மூள குடும்பத்தை உதறித்தள்ளிவிட்டுச் சமயத் தொண்டு செய்து சாந்தி பெற்றார் என அவர் வரலாறு கூறுகின்றது. புலன் நுகர்ச்சியால் வரும் இன்பம் பசித்துண்டு .பின்னும் பசிப்பானைப்போல மேலும் மேலும் அவாவினைப் பெருக்கும் ஆரா இயற்கையினையுடையதாகும். ஆதலின் புலனுகர்ச்சியின்றியே விளையும் இன்பந்தான் நிரந்தர மான அமைதியைத் தரும். அதுவே பேரின்பம் எனப் பெறுவது. அவ்வின்பம் என்றும் வற்றாதது - மாறாதது. அதனை அனுபவிக்கும் நிலையே முத்திநிலை எனப் பெறும். இவ்வுடம்போடு கூடியிருக்கும்போது தியான யோகமுதிர்ச்சியினால் அல்லது முன்னைய தவமுதிர்ச்சி யினால் சமாதிகூடிப் பேரின்பத்தை அனுபவித்தலும் கூடும். அவ்வாறு அனுபவிக்கும் நிலையைச் சீவன் முத்திநிலை எனவும் காலக்கிரமத்தில் உடம்பின்நீங்கி திருவருளிற் கலந்து திளைக்கும் நிலையைப் பரமுத்திநிலை எனவும் சித்தாந்த நூல்கள் கூறும்.

## முத்தியடைதற்குரிய மார்க்கங்கள்.

முத்தி என்பதைத் தமிழ் நூல்கள் வீடுபேறு எனக் கூறும். விடுதலும் பெறுதலும் என இச் சொற்றொடரை இரண்டாகப் பிரித்துப் பொருள் காண்பர் ஆன்றோர். விடுதல் என்பது உலகப்பற்றினை - பெறுதல் என்பது இறைவன் திருவருளை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்ற திருக்குறட் கருத்தும் இதுவே. இறைவனைப் பற்றினாலல்லது ஒருக்காலும் உலகப்பற்று அறாது. விஞ்ஞான சாதனைகளால் எலும்பு நரம்பு முதலிய கண்ணுக்குப் புலனாகும் பகுதிகளைப் பழுதுபார்க்கும் வாய்ப்பு உண்டாயிற்று. ஆனால் மனக்கோளாறுகட்குரிய காரணங்களைக் கண்டுபிடிக்கவோ அல்லது அவற்றைத் தீர்க்கவோ விஞ்ஞானத்துக்கு வல்லமை இல்லை. தெய்வ நம்பிக்கையோடு செய்யும் பிரார்த்தனைதான் முடிந்த முடிபான மருத்துவம் என்பதை Proff Jung என்ற அமெரிக்க உள நூற் பேராசிரியர் தமது நீண்டகால அனுபவத்திலிருந்து எடுத்துக் காட்டுகிறார். பொதுவுடைமையாலோ அல்லது குடியரசு முடியரசு முதலிய ஆட்சி முறைகளாலோ ஆன்ம சாந்தி கிடைக்கவில்லை. ஆன்மா வளம் பெற்றுச் சாந்தியடைய வேண்டுமானால் அதற்கு இந்திய நாட்டுத் தியான யோக நெறிதான் சிறந்த சாதனம் எனவும் கல்லூரி மாணவர்களின் பாட திட்டத்தில் தியான யோகப் பயிற்சியையும் ஒன்றாகச் சேர்ப்பது நல்லது எனவும் சர் ஆர்தர் கோய்சலர் என்ற பேரறிஞர் வற்புறுத்துகிறார். ஆதலால் வையத்துள் வாழ்வாங்கு வாழவும் உண்மையறிவு பெறவும் உயர்நிலையடையவும் எல்லாவற்றுக்கும் இறைவழிபாடு இன்றியமையாதது. சித்தாந்த நூல்களில் அவரவர்கட்கேற்ற எளிய முறையில் இறைவனை வழிபடுதற்காகச் சரியை கிரியை யோகம் எனப் படிமுறைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. முறையே இவற்றைப் பயின்றுவந்தால் ஞானம் விளையும், ஞானம் வீடு பேற்றினைத் தரும். தானியம் விளைவதற்காக உழுதொழிலைச் செய்கின்றாரேயன்றி உழவு தொழிலுக்காக உழு தொழிலைச் செய்யவில்லை. அதுபோலவே ஞானம் விளைவதற்காகக் கிரியா யோகங்களைப் பயிலவேண்டுமேதவிர வெறும் கிரியைக்காகவோ பிறரை மருட்டவோ அவற்றைச் செய்தல் கூடாது. பயன் நோக்காது செய்யும் போலி வழிபாடுகள்தான் ஒரோவழி ஞானிகளால் கண்டிக்கப் பெற்றன என்பதையும் வழிபாடு வேண்டாம் என்பது

அவர்கள் கருத்து அல்ல என்பதையும் அறிஞர்கள் நன்கு உணரவேண்டும். எனவே இங்கு "அருச்சனை வயலுள் அன்பு வித்திட்டு" என்றதுபோல வழிபாட்டிற்கு அன்பே (பக்தி) வித்தாக இருக்கவேண்டும். ஏனைய செயல்கள் அவ்வித்து முளைத்து வளர்ந்து பயன் தரத் துணையாக நிற்றல் வேண்டும். ஞானத்தை நோக்காது செய்யும் வழிபாடு வித்திடாது செய்யும் உழவு தொழிலைப் போன்றதாகும்.

"ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்
ஆனத்தால் அன்பிற் றெழு" எனவும்,

"கிரியையென மருவும் அவையாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் நூல்கள்"

எனவும் மெய்கண்ட சாத்திரம் விதிக்கின்றது. இவற்றுட் சரியை என்பது சிவாலயத்திற்கும் சிவஞானிகட்கும் இயன்ற பணிசெய்து வழிபடுதல். கிரியை என்பது சிவபெருமானைப் பூசனை முறையில் தூப தீபங் கொடுத்து வழிபடுதல். யோகம் என்பது தியான சமாதி முறையில் பயின்று தூல உடம்பின் நீங்கிச் சூக்கும உடலையும்விட்டு ஆன்மா தனித்துச் சென்று திருவருளிற் கலந்து நிற்றல். இந்நிலையில் நின்றுதான் திருமந்திரம் என்ற நூலைத் திருமூலர் அருளிச்செய்தார் எனப் பெரியோர்கள் கூறுகின்றனர். இன்னோரன்ன நெறிகளில் நின்று திருவருளுண்மையை நிருபித்துக் காட்டிய மெய்யன்பர்களின் வரலாற்றுக் கருவூலமே பெரிய புராணமாகும்.

பூதசத்திக்கும் மனிதசத்திக்கும் மேற்பட்ட தெய்வ சத்தியின் தொடர்போ துணையோ இல்லாமல் மனிதன் உயர்நிலையை அடைய முடியாதென்பது ஒருதலை. அத்தகைய தெய்வ சத்தியுடன் நம்மைத் தொடர்பு படுத்திவிட அமைந்தனவே சமயங்கள். அப்படியாயின் சமயங்

களின் தலைவர்கள் சந்தேகத்திற்கு இடமின்றி அந்தப் பேராற்றலைக் கண்டவர்களாக இருத்தல் வேண்டு மல்லவா? அவர்களே அப்பேராற்றலைக் காண வில்லை யாயின் நம்மனோர்க்குக் காட்டவோ நம்மை ஊக்கு விக்கவோ அவர்களால் எங்ஙனம் முடியும்? மந்திரசத்தி யும் அற்புதச் செயல்களும் சமய வளர்ச்சிக்கு இன்றி யமையாதன. அலெக்ஸிஸ்காரல் (Dr. Alexis Carrel) என்ற பேரறிஞர் இதனை நன்குணர்ந்து வற்புறுத்து கின்றார்.

"The strength of a religion depends upon the focuses of mystical activity where its life constantly grows"

"In all countries, ae all times, people have believed in the existence of miracles, in the more or less repaid healing of the sick at places of pilgrimage, at certain sanctuaries".

அற்புதச் செயல்கள் உண்மையாக நிகழ்ந்தனவல்ல என்பதோடு ஒருநாளும் நிகழவே முடியாது எனக்கருதும் சிலரும் இக்காலத்து இல்லாமலில்லை. தெய்வசத்தியை நிரூபித்துக் காட்டுவதில் ஈடு எடுப்பற்றவர்களாய்ச் சைவ சமயத் தலைவர்கள் விளங்குகின்றனர். அட்டமா சித்திக் கும் மேற்பட்டவை நாயன்மார்கள் செய்த அற்புதச் செயல்கள். அட்டமாசித்திகளை ரசாயன முறையில் விஞ்ஞானிகள் நாளடைவில் சாதித்து விடுதலும் கூடும். ஆனால் நாயன்மார்கள் செய்த செயற்கருஞ் செயல் களைத் திருவருள் துணையாலன்றி வேறு எவ்வகை யாலும் செய்தல் இயலாது. என்பு பெண்ணுருவாதலும், முதலை உண்ட பாலனை அழைத்தலும் போன்ற செயல்கள் பேரருள்தான் உலகத்தை நடத்துகின்றது என்பதை நிரூபிப்பதற்காகவே நிகழ்ந்தனவாகும். இவ் வாறு அருஞ்செயலாற்றிய நால்வரைத் தவிரவும் எண் ணற்ற மெய்த் தொண்டர்களைச் சைவசமயம் மனித

குலத்திற்கு வழிகாட்ட உதவியுள்ளது. மக்கள் வாழ்க்கை தகுதிக்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் பல்வேறு வகைப்படுகின்றன. அவர்கள் அனைவர்க்கும் யாராவது ஒருவரது வாழ்க்கைமுறைமட்டும் வழிகாட்டியாக இருந்து வாழ்விக்க முடியாது. எனவே பல்வேறு வாழ்க்கை நிலைகளில் நின்று அவரவர்கள் நிலைக்கேற்பச் சீரிய கொள்கைகளைக் கடைப்பிடித்து நிறைவேற்றிய பெரியோர்கள் பல்லோரது வாழ்க்கை வரலாறுகள் உலகத்திற்கு இன்றியமையாதனவாகின்றன. இந்தக் கருத்தோடு சிந்தித்தால் பெரிய புராணம் என்ற அருள் நூல்தான் நமது மனக்கண்முன் வந்து நிற்கின்றது. அந்நூலுள் காணப்பெருத வாழ்க்கை முறையே உலகில் இல்லை எனலாம். காலத்தாலும், இடத்தாலும், நிலையாலும் வெவ்வேறு வகைப்பட்ட பல்லோருடைய உண்மை வரலாருக அமைந்துள்ள பெரிய புராணந்தான் உலக மக்கள் அனைவரையும் அரவணைத்துக்கொண்டு வழிகாட்ட வல்லது.



# வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்.

*புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்*
*புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்*
*பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமும்சொற் பொருள்போல்*
*பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனல் வினைவதா யுடலுயிர்கண் ணருக்கன்*
*அறிவொளிபோற் பிறிவரு மத்துவித மாகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்ரும்.*

— *சிவப்பிரகாசம்.*

வேதாந்தக் கொள்கை கேவலாத்வைதம் எனவும் சித்தாந்த சைவக் கொள்கை சுத்தாத்வைதம் எனவும் வழங்கப் பெறுகின்றன. வேத உடன்பாடு திருநீறு கண்டிகை சிவவழிபாடு முதலியவற்ருல் இவையிரண்டும் மேற்பரப்புக்கு ஒன்றுபோலத் தோன்றினும் தெய்வம் வேறு என்ற கொள்கையிலும் சிவபரத்துவத்திலும் அடியோடு மாறுபடுவன. திருஞானசம்பந்தர் முதலிய சமய முதல்வர்கள் முப்பொருளுண்மையே வேதாகம உபநிடதங்களின் முடிபு என்பதையும் இறைவன் திருவருளே உலகை நடத்துகின்றது என்பதையும் சொல்லாலும் செயலாலும் தெளிவுபடுத்திப் போந்தனர். அதன் பின்னர்ச் சில நூற்ருண்டுகள் கடந்து மெய்கண்ட தேவர் பரம்பரை தோன்றியது. சமய முதல்வர்கள் நால்வரும் தெரிவித்த உண்மைகளைப் பிறழவைத்து மக்களைக் குழப்பும் ஏகான்மவாதம் முதலிய பர சமயக் கொள்கைகளை ஆய்ந்து அவற்றுட் காணப்படும் பொருந்தாமையை எடுத்துக்காட்டிச் சைவசித்தாந்தச் செம்பொருளை மீண்டும் நிலைநாட்டுவதற்காக மெய்கண்ட சந்தானம் தோன்றியதாகச் சந்தானசாரியர் புராணம்

கூறுகின்றது. தோத்திரங்களில் பொதுப்படையாகவும் உபசாரமாகவும் சொல்லிய பகுதிகளும் உள. அவற்றை யெல்லாம் அப்படியே பதவுரையாகப் பொருள் செய்தால் விபரீதமாகிவிடும். சாத்திரங்களில் அளவைகளாலும் அநுபூதியாலும் தத்துவங்களின் இலக்கணங்கள் வரை யறுக்கப்பட்டுள்ளன. அவ்வாறு வரையறுக்கப்பட்ட இலக்கணத்திற்கு முரண்படாதவாறு தோத்திரங்கட்குப் பொருள்செய்ய வேண்டும். இதனை அறிவுடையார் அனைவரும் ஏற்றுக்கொள்வர். உதாரணமாக ஒருபகுதி யைப் பார்ப்போம்:

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி" எனவும்,

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாயெறியும் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகி''

"ஓசை யொலிஎலாம் ஆனாய் நீயே'' எனவும்

திருவாசகத்திலும் தேவாரத்திலும் வருகின்ற பாடல்களை நாம் அறிவோம். இவ்வாறு வரும் பாடல் களைக்கொண்டு அத்வைதிகளும் நிமித்த காரண பரிணாம வாதிகளும் பிரமமே பிரபஞ்சமாயினதைக் குறிப்பதாகப் பொருள் செய்கின்றனர்.

பிரமம் என்று ஒருவர் சொல்கிறார். மற்றவர் சிவம் என்று சொல்கிறார். கடவுட் பொருளே பிரபஞ்சமா யிற்று என்ற கருத்து இருவர்க்கும் உடன்பாடுதான். இதனைச் சைவசித்தாந்தம் மறுக்கின்றது. ஜடப்பொரு ளுக்குச் சிறப்பு இலக்கணங்கள் இரண்டு. ஒன்று அறி வற்றது மன்றி அறிவித்தாலும் அறியமுடியாத தன்மை. இரண்டு பிறர் அசைத்தாலல்லது அசைவில்லாமை. இத்தகைய ஜடப் பிரபஞ்சம் சிவத்திலிருந்து தோன்ற முடியுமா? பிரமம், சிவம் என்பன ஒரு பொருளே யாதலின் பிரமத்திலிருந்துதான் தோன்ற முடியுமா?

பிரமமே இப் பிரபஞ்சமாயிற்று என்பது, கதிரவனே இருட்படலமாயினன் என்று சொல்லுவதையே ஒக்கும். தவிர மண்ணிலிருந்து செய்யப்பட்ட சட்டிபானை முதலியன நாமரூபங்கள் வேறுபட்டாலும் தன்மையால் மண்ணைப்போலவே இருப்பதைக் காண்கிறோம். அதுபோலவே பிரமத்திலிருந்து தோன்றிய பிரபஞ்சம் நாம ரூபங்களால் வேறுபட்டாலும் தன்மையால் பிரமத்தைப்போலவே இருத்தல் வேண்டும். அப்படி இல்லையே. ஆதலால் பிரமத்திலிருந்து பிரபஞ்சம் தோன்றியது என்றோ பிரமமே பிரபஞ்சமாயிற்று என்றோ சொல்வது தத்துவ இலக்கணத்திற்கு முரண் பட்டதாகும். அறிவுடையார் இதனை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அப்படியானல் மேலே சொல்லிய தோத்திரங்களின் உண்மைப் பொருள்தான் என்ன என்ற கேள்வி எழுகின்றது. பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் மாயை. மாயைக்கு இறைவனைத் தவிர வேறு ஆதாரம் இல்லை. இறைவன் திருவருள் அசைத்தாலல்லது மாயைக்கு அசைவும் இல்லை. இறைவன் திருவருள்தான் மாயையிலிருந்து உலகத்தைத் தோற்றுவித்தது. மாயைக்கு இன்றியமையாத ஆதாரமாக இருந்து அதனைத் தொழிற்படுத்துகின்ற நியாயம் பற்றி "இறைவனே நீயே அனைத்தும்" என்ற கருத்துப்படத் தோத்திரங்கள் செய்தனர். பங்கஜம் என்ற சொல் தாமரையைக் குறிக்கும். பங்கம் = சேறு, ஜம் = தோன்றியது. சேற்றில் தோன்றியது என்பதே இச்சொற்றொடரின் பொருளாகும். இச்சொற்றொடரால் நாம் தாமரையைக் குறித்து வருகின்றோம். தாமரைக் கிழங்கிலிருந்து தாமரைக் கொடி தோன்றுவதை நாம் அறிவோம். இஃது உண்மையாயினும் அக்கிழங்கிலிருந்து தாமரைக்கொடி முகிழ்த்து வளர்வதற்குச் சேறு இன்றியமையாதது. ஈரமும் சேறும் இன்றேல் தாமரை முளைத்து வளர முடியாது. தாமரைக் கிழங்கிலிருந்து தோன்றும் தாமரையை இன்றியமையாத ஆதாரம் பற்றிச் சேற்றிலிருந்து தோன்றியது என்று வழங்குவது போல

மாயையிலிருந்து தோன்றிய ஜகத்தை அதற்கு இன்றி யமையாத ஆதாரமாக இருந்து ஜகத்தைத் தோற்று விக்கும் இறைவனிடத்திலிருந்தே தோன்றியதாகத் தோத்திரங்களில் சொல்லப்பட்டது. தவிரவும் ஆகி எனவும் ஆனுய் எனவும் வரும் சொற்களே அவன் வேறு அவை வேறு, அவன் அவையானுன் என்பதைக் குறிப்பால் உணர்த்துவதாக ஸ்ரீ உமாபதி சிவம் நமக்கு அறிவுறுத்துகிருர். இவ்வாறு வருமிடங்களை யெல்லாம் ஆக்கப் பொருளாக மாற்றி ஆக்கிஞய் எனப் பொருள் செய்க எனவும் ஒரு உபாயம் சொல்லுகிருர் ஸ்ரீ உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள்.

சிவஞான போதம் என்ற அருள்நூல் வார்த்திகப் பொழிப்பு உதாரண வெண்பாக்களுடன் ஸ்ரீ மெய்கண்ட தேவரால் அருளிச் செய்யப்பட்டது. அவரது வழித் தோன்றல்களான திரு. அருணந்திசிவம் திரு. உமாபதி சிவம் முதலிய அனைவரும் அத்வைதக் கொள்கையை வன்மையாகக் கண்டித்து நூல் செய்திருக்கின்றனர். மாயாவாதம் என்று சொல்லுவதால் வேதாந்திகள் தங்களையன்று என்று வாதிடக்கூடும். வேதாந்தக் கொள்கையைத்தான் மாயாவாதம் என்ற பெயரால் சித்தாந்த நூல்கள் கண்டித்துப் பேசுகின்றன.

"மாஞ மதிகேடனுமாகி மாயாவாதி பேயாகி
நானே பிரம மென்றுரைக்கு மவன்றன் கருத்தை
[நவில்வேனே"

என்பது சிவஞான சித்தியார் பர பக்கம்.

"தாம்பிரமம் கண்டவர்போல் தம்மைக்கண்
[டாங்கதுவே
நாம் பிரமம் என்பவர்பால் நண்ணுதே" என்பது

நெஞ்சுவிடு தூது.

"மாயா வாதப் பேயா உனக்கு
மூவரி லொருவருண் டாக
ஓவரும் நரகம் உய்தலோ அரிதே"

என்பது சங்கற்ப நிராகரணம்.

இவ்வாறு மறுத்துரைக்கின்ற ஆசிரியர்கள் எழுதிய நூலில் எப்படி அத்வைதக் கொள்கை நுழைய முடியும் என்று சிந்தித்துப் பாருங்கள் அன்பர்களே! பிர்ம்ம நிஷ்டன் என்று உமாபதிசிவம் தன்னைக் கூறிக்கொள் வதால் அவர் அத்வைதி என்று அறியாமையால் எழுது கிருர்கள். பிர்ம்ம நிஷ்டன் என்ருலும் சிவாநுபூதிமான் என்ருலும் பொருள் ஒன்றே. சிவாநுபூதிச் செல்வர் என்பதறகுப் பதிலாகப் பிரம்ம நிஷ்டன் என்று தன்னைக் கூறிக்கொள்வதில் தவறு ஒன்றுமில்லை. "மாயா வாதப் பேயா" எனவும் "நாம் பிரமம் என்பவர்பால் நண்ணுதே" எனவும் கூறுகின்ற உமாபதிசிவம் எப்படி அத்வைதியாக முடியும். இது நிற்க. சிவஞானபோதச் சூத்திரத்தை மட்டும் எடுத்துக்கொண்டு ஏகான்மவாதக் கொள்கை அதன்கண் இருப்பதாகச் சிலர் வரிந்து வரிந்து எழுதுகின்றனர். அத்வைதக் கொள்கைதான் உயர்ந்தது என்று அவர்கள் சாதிப்பதைப்பற்றி யாரும் கவலைப்படமாட்டார்கள். குறைகூறவும் மாட்டார்கள். சித்தாந்த நூல்களைப் புரட்டி இங்கொன்றும் அங் கொன்றுமாக எடுத்துக்கொண்டு இதோ பார் அத்வை தம் என்று சொல்வது அறிஞர்களால் எள்ளிநகையாடற் குரியதாகும். சிவஞானபோத முதற் சூத்திரம் 'ஒடுங்கி மலத்துளதாம்" எனக் கூறுகின்றது ஆணவமலம் என ஒரு மலமுண்டு என அத்வைத நூல்களில் எங்கும் சொல்லப்படவில்லை. ஞானத்தின் அபாவம்தான் மறைப்பு என்று அவர்கள் சொல்லுகிருர்கள். ஒரு பொருளில்லாமை ஒரு காரியத்தைச்செய்ய முடியாது. ஆதலால் ஆணவமலம் என்ற கருந்திரைதான் ஆன்ம அறிவை மறைக்கின்றது எனச் சித்தாந்திகள் கூறு கின்றனர். இன்னும் உதாரண வெண்பாக்களுள்

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீ பாசத்தோடுளே காண்"

என வருவது இருக்கு வேதத்துள் ஏகம் என்று சொல்லியது ஏகமே அதாவது பதிப்பொருள் இரண்டில்லை ஒன்றே என்பதற்காகச் சொல்லப்பட்டது. அதனை ஒன்று என்று கண்டு சொல்லும் நீ பாசத்தாற் கட்டுண்டு கிடக்கும் பசு என அறிவாயாக என மெய்கண்டதேவர் கூறுவாரானுல் அவரை ஏகான்மவாதி எனக் கூறுவது எவ்வளவு மடமையாகும். பிறிதோர் பொருளும் இல்லாது இருப்பது ஒரே பொருளானுல் அது தன்னைத் தானே ஏகம் என்று சொல்லிக்கொள்ள வேண்டிய பிரமேயமே இல்லாமையால் ஏகம் என்ற சொல்லுக்கு கடவுள் ஒருவரே எனப் பொருள் செய்வது தான் சுருதி, யுத்தி, அனுபவம் மூன்றுக்கும் ஒத்ததாகும் என்பதை அறிஞர் உணர்வர்.

"மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணுதேல்
ஆயாதா மொன்றை அறியாதாம்"

என்ற வெண்பாவில் மாயா காரியமான சரீரத்தை விளக்குப்போலப் பயன்படுத்திக்கொண்டு ஆன்மா சிறிது சிறிதாக அறிவு விளங்கி வருகின்றது. இந்த உடம்பினைக் கைவிட்டால் அறி கருவிகள் ஒன்றும் இல்லாமையால் ஆன்ம அறிவு தொழிற்பாடின்றிக் கிடக்கும் என்ற கருத்து வலியுறுத்தப் படுகின்றது. மாயை ஆன்மாவிற்கு விளக்குபோன்றது என்ற சிவஞானபோதக் கருத்தும் மாயை பிரபஞ்சத்திற்கு மறைப்பு என்ற ஏகான்மவாதக் கருத்தும் அடியோடு முரண்படுதலை அறிவுடையார் சிந்திக்க. இவ்வாறே தாயுமானவர் பாடலும் பொது நெறிபோலக் காணப்பட்டாலும் "சித்தாந்த முத்திமுதலே" என்ற தொடரால் அவர்க்குப் பற்றியது சித்தாந்த நெறிதான் என்பது புலனுகின்றது.

"யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்"

என நானே பிரமம் என்பவர்களைக் கண்டிப்பதோடு

"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ"

எனச் சுத்தாத்துவித சித்தாந்த நெறியினையளித்த மெய்கண்டதேவரைப் போற்றுகின்றார் என்பதையும் நாம் அறிவோம். தவிரவும் பத்திரகிரியாரிலிருந்து சுகப்பிரம்மம் வரை போற்றுகின்றவர் ஆதி சங்கரரைப்பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லாத காரணம் என்ன?

"காரிட்ட ஆணவக் கருவறையி லறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போல்
கட்டுண்டிருந்த எமை வெளியில்விட் டல்லலாம்
காப்பிட்டதற் கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவினை யமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவரவுறுகின்ற
பெரிய விளையாட் டமைத்திட் (டு)
ஏரிட்டதன் சுருதி மொழிதப்பின் நமனைவிட்
டிடருற உருக்கி யிடர்தீர்த் (து)
இரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்து துயில் கொள்மின் என்று
சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தெக்ஷிண மூர்த்தியே
சின்மயானந்த குருவே"

என்ற பாடலின் ஆணவ மலத்தூடமுந்திக் கண்ணிலாக் குழவியைப் போல் கட்டுண்டு கிடந்த ஆன்மாக்களாகிய எங்களை என்று தாயுமானர் கூறுகின்றார். பரப்பிரம்மத்தை அஞ்ஞானத்துக் காளாக்கி ஆரோபத்தால் அதனையே மயங்கவைத்த ஏகான்ம வாதிகள் எப்படி மேலே சொல்லியபாடலை ஒத்துக்கொள்வார்களோ தெரியவில்லை. ஆன்மா ஒன்றே என்பது அவர்கள் கருத்து.

ஆன்மா பல என்பது தாயுமானுர் கருத்து. பரப்பிரமம் மயங்கியது என்று அவர்கள் கூற ஆன்மா ஆணவ மலத் தால் மோகமுற்றது என்று தாயுமானுர் கூறுகின்ருர். இறைவன் — ஆன்மா — ஆணவம் -- கன்மம் — மாயை என்ற ஐந்தும் இப்பாடலிற் குறிக்கப் பெற்றுள்ளன. "வேதாந்த சித்தாந்த சமரசம்" எனத் தாயுமானுர் கூறுவது ஏகான்மவாதமும் சித்தாந்தமும் ஒன்றெனக் கூறியதாகக் கொள்ளல் தகாது. வேதாந்தம் என்பது உபநிடதங்களே; சித்தாத்தம் என்பது வேத உபநிடதங் களின் முடிபினே. வேத உபநிடதங்களின் முடிபு ஆக மங்கள். வேதமுடிபாகிய உபநிடதங்களும் ஆகமாந்த மும் ஒன்று என்பதே தாயுமானுர் முதலிய சித்தாந்தச் செல்வர்களின் கருத்து. சிவாகமங்களிலுள்ள ஞான பாதப் பொருளே மெய்கண்ட சாத்திரங்களாகத் தமிழில் வெளிவந்துள்ளன. வேதாந்தமாகிய உபநிடதங்களேப் பொருள் செய்தோர் அவரவர்கள் அறிவு நிலேக்கும் அநு பவத்திற்கும் ஏற்பப் பொருள் செய்தனர். ஆன்ம அறி வின் எல்லேயில் நின்று கொண்டு மதியூகத்தால் சாதிக் கப்பட்ட கொள்கைகளெல்லாம் இறையறிவு பெற்ருரால் கண்டிக்கப்பட வேண்டியதாயிற்று. இறையறிவு என்பது சிவஞானமாதலால் சிவஞானிகளாகிய திருஞானசம்பந் தர் மெய்கண்டதேவர் முதலியோர் வாக்குகளே சைவ சித்தாந்திகள் கொள்ளற்பாலன. ஏனேய தள்ளற்பாலன. வேதம் பொதுநூல் எனவும் ஆகமம் சிறப்புநூல் எனவும் சித்தியரர் கூறுகின்றது. திருமூலரும்

"வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்
ஓதும் பொதுவும் சிறப்புமென் றுள்ளன"

என்று கூறுகிருர். திருமந்திரத்தில் உபநிடதங்க ளேக்" குறிக்கவில்லே யாதலால் அவற்றைப் பூர்வ பக்க நூலாக மதித்துத் திருமூலர் ஒதுக்கிவிட்டார் என்று கருதவேண்டியிருக்கிறது. தவிரவும், "சிந்தை செய்தா கமம் செப்ப லுற்றேனே:' எனத் திருமந்திரம் கூறுவ

தால் ஆகம நெறிதான் திருமூலர் நெறி என்பது தேற்றம்.

> " ஆனந்தா தீதமாம் அத்துவித சித்தாந்த
> மோனம்வே தாந்த முடிவு''

என்ற ஒழிவிலொடுக்க வெண்பா உரையில் "வேதாந்திக்குப் பெத்த திசைபோல் முத்தியிலும் நானென்பது தொடர்தலின் ஆகம முடிவாகிய மௌனம் வேதாந்த முடிபு'' எனச் சிதம்பர சுவாமிகள் கூறியுள்ளார்கள். திருஞானசம்பந்தர் ஓதாமல் வேதமுணர்ந்தார் என்ற உண்மையைக் கூறும் " தன்மையும் முன்னிலையும்'' என்ற வெண்பா வுரையில்,

> " வியாசர் முதலியோர் ஓதாமல் உணரினும் அவர்க்கு
> விட்டுணு பரமென்றும் அகம் பிரம்மம் என்றும்
> பின்னர் மலைவு பிறந்தமையின் திருஞானசம்பந்தர்
> போலும் சுதந்திர அறிவிலர் என்க''

எனச் சிதம்பரசுவாமிகளே கூறியிருத்தல் அறிஞர்கள் சிந்தித்தற்குரியது. இனி மேலே குறித்துள்ள சிவப்பிரகாசப் பாடற் பொருளை எழுதி இக்கட்டுரையை நிறைவு செய்வோமாக. வேதசிவகாமங்களை உரைகல்லாக வைத்துக்கொண்டு ஏனைய சமயக் கொள்கைகளின் எல்லையை வரையறுப்பது மெய்கண்ட சாத்திரம். வேதத்தையே ஒத்துக்கொள்ளாதவர்கள் புறப்புறச் சமயத்தார் எனவும் வேதத்தைமட்டும் ஒப்புக்கொள்பவர்கள் புறச் சமயத்தார் எனவும் வேதம் சிவாகமம் இரண்டினையும் ஒப்புக்கொள்பவர்கள் அகப்புறச் சமயத்தார் எனவும் பொதுவகையால் பாகுபாடு செய்து, பின்னர் அவர்கள் கொள்கைகளை ஒவ்வொன்ருக ஆய்வு செய்து பொருந்தாமையை எடுத்துக் காட்டித் தனது முடிபினையும் எடுத்து நிருபிப்பது மெய்கண்ட சாத்திரமாகும். புறப்புறம் புறம் அகப்புறம் என்ற இம்மூவகைச் சமயத்தார்க்கும் பதி பசு பாச உண்மைகள் தெளிவுபடாமையின்

அவர்கட்கு அறியமுடியாதது என்பார். புறச் சமயத்தவர்க் கிருளாய்" என்று கூறினர். அகச் சமயத்தார் பதி பசு பாச உண்மையினை ஒத்துக்கொண்டு பொது இயல்பு சிறப்பியல்புகளில் சிறிதே மாறுபடுவராதலின் அவர்களால் அறியப்பட்டது என்பார் "அகச் சமயத் தொளியாய்" என்று கூறினர். நுட்ப மதியாலும் ஆழ்ந்த சிந்தனையாலும் உலக அநுபவத்தாலும் வகுக்கப்பட்ட விதிகளே அளவைகள் எனப்படுவன. எனவே அளவைகட்கு ஒத்து அளவைகளால் அளந் தறியத்தக்க கொள்கைதான் மதியூகத்திற்கும் உலக அநுபவத்திற்கும் நெருங்கி வரும். அவ்வாறின்றிக் கடவுளே இல்லையெனவும் ஆன்மாவே இல்லை எனவும் உலகமே பொய் எனவும் கூறுவன எல்லாம் அறிவுடை யாரால் ஒதுக்கப்பெற்றுவிடும். சைவசித்தாந்தக் கொள்கையோ அளவைகளால் நிரூபிக்கக்கூடிய உண் மைத் தன்மை வாய்ந்தது என்பார், "புகல் அளவைக் களவாகி" என்று கூறினர். இறைவனுக்கும் ஆன்மா விற்கும் உள்ள உறவுநிலைபற்றித்தான் பிணக்குகள் அதிகமாகக் காணப்படுகின்றன. இது மிகவும் சிக்க லானது. நிதானமாகச் சிந்தனை செய்தாலன்றி இது எளிதிற் புலனாகாத உண்மையாக இருக்கின்றது. இப் பிணக்குகள் அனைத்தையும் இவ் வொருபாடலிலேயே ஆசிரியர் உமாபதிசிவம் எடுத்துக்காட்டிச் சித்தாந்த முடிபினையும் தெளிவுபடுத்தியிருப்பது திருவருள் வல்லமையால் வாய்த்ததென்றே கூறுதல் வேண்டும். இறைவனும் ஆன்மாவும் அபேதமே (ஒன்றே) என்பார் ஒருசாரார். இறைவனும் ஆன்மாவும் பேதமே (வேறே) என்பர் மற்றொருசாரார். இறைவனும் ஆன்மாவும் பேதாபேதம் (ஒன்றே வேறே) என்பர் பிறிதொரு சாரார். ஆனால் சைவ சித்தாந்திகளோ இறைவனுக் கும் ஆன்மாவிற்கும் உள்ள உறவு நிலையில் இம் மூவகையும் உண்டு என்று சொல்லுகின்றனர். அதாவது இறைவனும் ஆன்மாவும் ஒருவகையில் பேதமாகவும் ஒருவகையில் அபேதமாகவும் இருக்கின்றார்கள் என்பதே.

தவிரவும் இவ்வுறவுநிலையைத் தெளிவுபடுத்த மற்றை யோர் கூறும் உவமைகள் பொருந்தாதவை என எடுத்துக்காட்டிப் பின்னர் பொருத்தமுள்ள வேறு உவமைகளால் உண்மையைத் தெளிவுபடுத்துகின்றது இப் பாடல்.

இறைவனும் ஆன்மாவும் அபேதமே (ஒன்றே) பொன்னும் பொன்னல் செய்யப்பட்ட ஆபரணங்களும் இருக்கின்றன. அவற்றுக்குக் குண்டலம், மோதிரம், கடகம் எனப் பெயரிடுகின்ருேம். இவ்வாறு பெயரிடப்பட்ட ஆபரணங்களின் பெயரையும் வடிவத்தையும் நீக்கிப்பார்த்தால் அவையனைத்தும் பொன்என்றே சொல்லப்படும். அதுபோல சீவாத்மாக்களின் பெயர்களையும் வடிவங்களையும் நீக்கிப் பார்த்தால் அவையனைத்தும் பரமாத்மா என ஒன்ருகிவிடும். பரமாத்மாதான் சீவாத்மாக்களாகியது என்பது "பொன் பணிபோல்" என்று கூறும் ஏகான்மவாதிகள் கருத்து. உவமையும் பொருளும் முற்றும் பொருந்தாது என்பதும் உவமைக்கும் பொருளுக்கும் பொதுத்தன்மை ஏதாவது ஒன்று இருக்க வேண்டும் என்பதும் அறிவுடையார் அறிந்ததே. பொன் செய்வோனையின்றிப் பணிகளாக மாட்டாது. பொன்னுக்கும் பணிகட்கும் மாற்று ஒன்ருகவே இருக்கும். இந்த இரண்டில் ஏதாவது ஒன்று பரமாத்மாவே சீவாத்மாக்களாயிற்று என்ற பொருளில் இருக்கவேண்டும். அதாவது பரமாத்மா பிறரால் சீவாத்மாக்களாக ஆக்கப் பட்டிருத்தல் வேண்டும். அல்லது பரமாத்மாவும் சீவாத்மாக்களும் குணத்தால் ஒத்திருக்க வேண்டும். பரமாத்மா சத்துசித்து ஆனந்தம் என்றும் சீவாத்மா கிஞ்சிக்ஞன் என்றும் அவர்களே கூறுகின்றனர். பிரபஞ்சம் இடர் சடம் துக்கம் என்றும் கூறுகின்றனர். முற்றறிவுடைய பொருளே சிற்றறிவினதாயும் ஜடமாயும் ஆயிற்று என்று சொல்வது எவ்வளவு முரண்பட்டது என்பதை அறிஞர் உணர்வர். அதனல் இறைவனும் ஆன்மாவும் அபேதம் என்பதற்கு இவ்வுவமை பொருந்ாதெ்தன விலக்கி

உடலும் உயிரும் போல் அபேதம் எனச் சித்தாந்த சைவம் கூறுகின்றது. ஒரு உயிரையும் கண்டறியாத நாம் இராமன் சீதை எனப் பெயரிடுகிறோம். அப் பெயர்கள் உடம்புகளைப் பார்த்து வைக்கப்பட்டனவே தவிர உயிர்களைப் பார்த்து அல்ல. அப்படி யிருந்தாலும் இராமா வா என்றால் அவன் உடனே வருகின்றான். அந்த உடம்பில் தங்கியிருக்கும் உயிர் அவ்வுடம்புக்கிட்ட பெயரைத் தனக்கு இட்டதாகக் கொண்டு உடனே வருகின்றது. இவ்வாறு உயிரும் உடம்பும் ஒன்று போலவே அனைத்தும் நிகழ்ந்தாலும் உயிர் உயிரே உடம்பு உடம்பே என்பதையும் உயிர்வேறு உடம்புவேறு தான் என்பதையும் நாம் அறிந்திருக்கிறோம். உடம்பு வளர்தற்கும் அதன் இயக்கத்திற்கும் உயிர் இன்றியமை யாதது. அதுபோலவே உயிர் நிலைத்தற்கும் அதன் தொழிற்பாட்டிற்கும் இறையருள் இன்றியமையாதது. உடம்பில் உயிர் அபேதமாய்க் கலந்திருத்தல் போல இறைவனும் உயிர்க்கு உயிராய் உயிர்தோறும் கலந்து நிற்கின்றான். இதுவே அபேத நிலையாகும்.

## இறைவனும் ஆன்மாவும் பேதமே (வேறே)

“இருளும் வெளியும் போல” ஆன்மாவும் இறைவ னும் வேறே என்பது மாத்வர்கள் கருத்து. வெளி என்பது இங்கே ஒளியைக் குறிப்பது. முத்தியிலும்கூட ஆன்மா வைகுந்த உலகத்தில் விஷ்ணு இருக்கின்ற இடத்தில் ஒன்று சேருமே தவிர விஷ்ணுவோடு ஐக்ய மாவதில்லை என்று அவர்கள் கூறுகின்றனர். இருளும் ஒளியும் ஒன்றன்முன் பிறிதொன்று நில்லா. இது போலவே இறைவன்முன் ஆன்மாவோ ஆன்மாவின் முன் இறைவனோ இருக்க முடியாது என்று பொருள் செய்யவேண்டி யிருக்கிறது. அப்படிக் கொண்டால் இறைவன் உயிர்க்குயிராய் நின்று அறிவிக்கின்றான் எனவும் முத்தியில் இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் ஆன்மா எனவும் வரும் வேதக் கருத்தோடு

மாறுபடுகின்றது. ஆதலால் இருளும் ஒளியும் போல ஆன்மாவும் இறைவனும் இருப்பதாகக் கூறுவது பொருந்தவில்லை. கண்ணும் ஞாயிறும் போல வேறு என்ற உவமையைப் பேதநிலைக்கு உரியதாகச் சித்தாந்தம் கூறுகின்றது. கண்ணனது ஒருபொருளைக் காண்பதற்குக் கதிரவனொளி இன்றியமையாதது. அவ்வாறு இன்றியமையாத நிலையில் கதிரொளி கண்ணொளியோடு கலந்து காட்டியும் கதிரவன் வேருகவே இருக்கின்ருன். அதுபோலவே சிவசக்தி ஆன்ம அறிவிற்கு அறிவாய் நின்று அறிவித்தும் சிவம் பொருளால் வேருகவே இருக்கின்றது. இதுவே பேத நிலையாகும்.

இறைவனும் ஆன்மாவும் பேதாபேதம் (ஒன்றும் வேறும்) சொல்லும் பொருளும் போலப் பேத நிலையில் விஷ்ணுவும் ஆன்மாக்களும் இருக்கின்றன என்பது வைணவர்கள் கருத்து. சொல்லைச் சொன்னவுடனே அதனல் குறிக்கப்பெறும் பொருள் தோன்றுகிறது. சொல்லும் பொருளும் வேருயிருத்தலால் பேதமும் சொல்லைச் சொன்னவுடனே அதனின் வேருகியபொருள் தோன்றுதலால் அபேதமும் என இருவகையா யிருப்பது போல் வாசுதேவன் என்று சொன்னவுடனே அவனது நிறைவில் உலக உயிர்கள் அவனுக்கு விசேடணமாகவும் அவற்ருல் அவன் விசேடிக்கப் படுபவனுகவும் இருக்கின்ருன். இவ்வாறு கூறுவதால் இது விசிட்டாத்வைதம் எனப் பெயர் பெற்றது. இங்கே கதிரவன் என்று சொன்னல் சொல் வாக்கில் இருக்கிறது. சொல்லால் குறிக்கப்படும் பொருள் வானத்தில் இருக்கிறது. சொல் ஓரிடத்திலும் அதனல் குறிக்கப்படும் பொருள் பிறிதோரிடத்திலும் இருப்பது ஆன்மா ஓரிடத்திலும் இறைவன் பிறிதோரிடத்திலும் இருப்பதாகப் பொருள் செய்யவேண்டும். இவ்வாறு கொள்வது ஆன்மாக்கள் தோறும் அந்தர்யாமியாய் இருக்கின்ருன் என்ற அவர்கள் கூற்றுக்கே முரண்படுகின்றது. ஆதலால் பேதாபேத

நிலைக்கு இவ்வுண்மை பொருந்தவில்லை என்பதுதேற்றம். கண்ணும் ஆன்ம போதமும் போல என்ற உவமையைப் பேதாபேத நிலைக்கு உரியதாகச் சித்தாந்திகள் கொள்கின்றனர். கண்ணனது ஒருபொருளைக் காண்பதற்கு அகத்தே ஆன்மாவின் தூண்டுதல் வேண்டும். ஆன்மாவின் தூண்டுதலின்றி ஒருபொறியும் அதன் தொழிலைச் செய்யாது. ஆன்மபோதம் கண்ணோடு நின்று தூண்டும்போது அபேதமாக நின்று தூண்டுதலைச் செய்தும் பொருளால் தான் வேருகவே (பேதம்) இருக்கின்றது. அதுபோல இறைவன் ஆன்ம அறிவிற்கு அறிவாய் ஒன்றியிருந்து அறிவித்தும் தான் பொருளால் வேருகவே இருக்கின்ருன் என்பதே பேதாபேத நிலையாகும். இதுகாறும் "பொற்பணி போல் அபேதப், பிறப்பிலதாய் இருள் வெளிபோல் பேதமும் சொற்பொருள்போல் - பேதா பேதமும் இலதாய் என்ற பகுதியும், 'உடலுயிர் கண்ணருக்கன் அறிவொளி போல்" என்ற பகுதியும் சிந்திக்கப் பெற்றன. இனி பெருநூல் சொன்ன அறத்திறனல் விளைவதாய்'' என்பது சிவாகமங்களிற் சொல்லியவாறு சரியை கிரியா யோகங்களைப் பயில்வதால் விளையக்கூடியதாய் என்ற கருத்தைத் தெரிவிப்பதாம் ''பிறிவரும் அத்துவிதமாகும் சிறப்பினதாய்'' என்றது சிவாகமங்கள் கூறும் அத்துவித நிலையைக் குறிப்பதாகும். தாதான்மிய சம்பந்தம் இருவகைப்படும். நூல் அவயவம். அதனல் நெய்யப்பெற்ற ஆடை அவயவி. நூலும் ஆடையும் அவயவ அவயவி என்ற சம்பந்தம் உடையது. செம்மை என்பது நிறப்பண்பு. அதனையுடைய தாமரை குணகுணி என்னும் சம்பந்தம் உடையது. இந்த இரண்டும் ஒரு பொருளே இரண்டாக வேற்றுமைப்பட்டு நிற்கும் சம்பந்தம் உடையன. கண்ணும் கதிரவனும் பொருளால் இரண்டே யாயினும் காட்சி நிகழும்போது கண்ணொளியும் கதிரொளியும் பிரிப்பற நின்று காண்கின்றது. இது பொருளால் இரண்டாகிக் கலப்பால் ஒன்ருகக் காணப்படும் தாதான்மிய சம்பந்தமாகும். இவற்றுள் ஒரே பொருள் இரண்

டாக வேற்றுமைப்படுதலைத் தாதான்மியம் எனவும் இரண்டு பொருள் கலப்பால் ஒன்ருகி நிற்றலை அத்து விதம் எனவும் கூறுதல் மரபு என மாதவச் சிவஞான யோகிகள் அறிவுறுத்தி யிருப்பதால் இக்கருத்தே பற்றிப் "பிறிவரும் அத்துவிதமாகும் சிறப்பினதாய்" என்ருர். "அத்துவிதம் என்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்துமாயிட்டு" என்ற சிவஞான போதக் கருத்தும் ஈண்டு சிந்திக்கத்தக்கது. இவ்வாறு வேத உபநிடதங்களின் முடிந்த முடிபாய் விளங்கும் சைவசித்தாந்த உண்மைகளை இங்குச் சொல்லலுற்றேன் என்பார், வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்ரும் ''என்ருர். சைவ சித்தாந்தச் செந்நெறி நிற்கும் புண்ணியம் வாய்த்த மெய்யன்பர்கள் சைவசித்தாந்த நெறியின் விழுப்பத்தினை உணர்ந்து உறுதியோடு அந்நெறியில் நிற்றல் வேண்டும் என்ற ஆர்வமே இக் கட்டுரையை எழுதத் தூண்டியது. மெய்யன்பர்கள் இதனை உணர்வார்களாக.



# மெய்ப்பொருள் காண்பதறிவு.

---

வேதாந்தக் கொள்கையை ஏகான்மவாதம் மாயா வாதம் என மற்றையோர் வழங்குகின்றனர். பிர்ம்மம் அல்லது பரமாத்மா ஒன்றே உள்பொருள் எனச் சாதிப்ப தால் ஏகான்மவாதம் (ஒரே ஆன்மா) எனவும் அவித்தை என்னும் மாயா உபாதிகளால் பரப்பிரம்மம் உலக உயிர் கடவுளராக மயங்கிற்று என்று கூறுவதால் மாயாவாதம் எனவும் அதன் சிறப்பியல்பு பற்றி மற்றையோர் அவ்வாறு குறித்தனர்போலும். சைவசித்தாந்தம் சற் காரியவாதம் எனவும், புத்தமதக் கொள்கை கணபங்க வாதம் எனவும், சமண சமயக் கொள்கை சற்காரியவாதம் எனவும் வழங்கப் பெறுவதும் இங்கே சிந்திக்கத்தக்கது. சத்தப்பிரம்மவாதம் கிரீடாப் பிரமவாதம் பாற்கரியவாதம் என்பன வேதாந்தக் கொள்கையின் உட்பிரிவுகளாகும். மாயாவாதிக்குத் தத்துவம் இருபத்தைந்து என்றும் வேதாந்திக்குத் தத்துவம் இருபத்தெட்டு என்றும் திரு மந்திரம் கூறுகின்றது.

> "மனமே புருடனன்றி மற்றிலையென் றோதும்
> கனமாயா வாதிமதம் காண்"

என்ற வெண்பா மேற்கோளாக வருகின்றது. அவித்யை மாயை என்பன ஒருபொருட் கிளவி என்பது வடமொழி வல்லோர் கருத்து. ஏகான்ம வாதியை அவித்தையினேன் எனவும் மாயாவாதி எனவும் சங்கற்ப நிராகரணம் குறிக்கின்றது. எனவே ஏகான்மவாதம் மாயாவாதம் என்ற பெயரால் வேதாந்தக் கொள்கை யைத்தான் சித்தாந்த நூல்கள் ஆய்கின்றன. சித்தாந்த நூல்களில் மறுக்கப்படும் கொள்கைகள் தங்கட்கில்லை என்று வேதாந்திகள் சொல்வார்களானல் அதனை அறி வுடையார் ஏற்றுக் கொள்வர். சித்தாந்த நூல்களி

லிருந்தும் பிறவற்றிலிருந்தும் நாம் அறிந்துள்ளபடி ஏகான்மவாதக் கொள்கையை முன்னர் எடுத்துக்கூறிப் பின்னர் அதனை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

ஞானமே சொரூபமாய் - பிரபஞ்சத்திற்குக் காரணமாய் - எல்லையில்லாத ஆனந்தமாய் - உருவமின்றி அருவாய் - எங்கும் நிறைந்து நிற்பதாய் - கேடில்லாததாய்- விளங்கும் சத்தாய் - அசுத்தத்துடன் கூடாது சுத்தமேயாய் - ஓர் அடையாளமும் ஓர் குணமும் இல்லாததாய் வேத முதற்பொருளாய் - கரும்பிலிருக்கும் தீஞ்சாற்றினைக் கரும்பு அறியாதவாறு போலத் தன்னில் விளையும் இன்பத்தினைத் தான் அறியாத இயல்பினதாய் இருப்பது சுத்தப் பிரம்மம். சுத்தப்பிரம்மம் – பரப்பிரம்மம் - பரமானந்தன் – பரிபூரணன் - பூரணன் என்றெல்லாம் பல பிரகாரமாகச் சொல்லப்படும். அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிர்ம்மத்தினிடத்தில் கானல் நீர்போல மூலப் பிரகிருதி என்றோர் சத்தி தோன்றிற்று. அது முக்குண வடிவினது. அந்த முக்குணங்களுள் தெளிந்த நீரில் தோன்றும் நிழல்போலச் சத்துவகுண மாயையில் பிரம்மப் பொருள் பிரதிபிம்பித்தலால் முற்றறிவு முதலிய குணங்களையுடைய ஈசுரனாயிற்று. அவ்வாறே அழுக்கு நீரில் தோன்றும் நிழல்போல ரஜோகுண மாயையில் பிரமப்பொருள் பிரதிபிம்பித்தலால் சீவர்களாயிற்று. மூன்றுவதான தமோகுணம் ஆவரணம் விட்சேபம் என இரண்டு சக்திகளாயிற்று. சூரியனை மேகம் மறைப்பது போல ஆவரணசத்தி பிரமப்பொருளை மறைத்தது. விட்சேபத்திலிருந்து வான்வளியாதி பூதங்களும் பிரபஞ்சமும் கயிற்றினிடத்துப் பரம்பு தோற்றுவிக்கப்பட்டது போல உண்டாயின. இவையனைத்தும் ஆரோபத்தால் விளைந்தவை. அவ்வாரோபம் அவித்தையில் விளைவு.[1] ஈசுவரனுக்கும் சீவனுக்கும் உள்ள பேதங்களைக் களைந்தால் அதாவது பிரமப்பொருளால் பிரதிபிம்பிக்கப்பட்ட மாயை அவித்தை முற்றறிவு சிற்றறிவு முதலியவற்றை நீக்கிப்

1. பாகத்தியாகலக்ஷணை.

பார்த்தால் பிரதிபிம்பங்கள் அனைத்தும் ஒன்றேயாய் அதுவும் பிரம்மமேயாய் ஜகத்து இல்பொருளாய் ஒழிந்து விடும். இவ்வாறு தான் பிரம்மமே என்றும் பிரம்மத்துக்கு அன்னியமாய் ஒரு பொருளும் இல்லை யென்றும் உணர்வது அபவாதம் என்ற உத்தியாம்.

பிரம்மத்திலிருந்து தோன்றிய பிரபஞ்சம் நித்தமோ அநித்தமோ எனின் அநித்தமே. வெள்ளிபோலத் தோன்றும் இப்பியையும் வெள்ளியையும் கனலில் இட்டால் வெள்ளி நிற்க இப்பி கெட்டுவிடுமாறு போல அவிகாரமாகிய பிரம்மத்தையும் மெய்ப்பொருள் போலத் தோன்றும் பிரபஞ்சத்தையும் பரமார்த்தத்தில் நிருபணம் செய்தால் அவிகாரமாகிய பிரம்மம் ஒன்றுமே மெய்யாய்ப் பிரபஞ்சம் பொய்யாய் விடும். எந்தப் பொருள் தனது தோற்றத்துக்கு முன்னும் அழிவிற்குப் பின்னும் இல்லையோ அந்தப் பொருளை இல்பொருள் எனவே கொள்ளவேண்டும். பிரம்மம் போல உள்பொருளுமன்றி முயற்கொம்பு போல இல்பொருளுமன்றிச் சொல்லொணுத நிலையிலிருப்பதால் மாயையை அநிர்வசனீயம் என்பதே பொருத்தமாகும். சத்தும் சித்தும் ஆகிய பிரம்மத்திலிருந்து அசத்தும் அசித்துமாகிய ஜடப்பொருள் தோன்றுமோ எனில் தோன்றும். சிலம்பியிலிருந்து நூல் உண்டாவது போலவும் நெல்லிலிருந்து வைக்கோலும் பதரும் உண்டாவது போலவும் பிரம்மத்திலிருந்து பிரபஞ்சம் தோன்றியதாக அறிதல் வேண்டும். சிலம்பியும் நூலும் வேறு வேறு பொருளாதல் போலப் பிரபஞ்சமும் பிரம்மமும் வேறு வேறுதானே எனில் அப் பிரம்மந்தானே இப்பிரபஞ்சமாயிருக்கும்: ஆகையால் பிரபஞ்சமும் பிரம்மமும் வேறு எனக் கொள்ளப்படாது. சிலம்பியின் நூல் ஒரு தன்மைத்தாயிருக்கவும் பிரபஞ்சம் பல பிரகாரமாய் இருப்பானேன் என்னில் மரத்திலிருந்து இலையும் பூவும் காயும் பழமும் நாரும் வயிரமும் தோன்றுவது போலவும் புனலில் நுரையும் திரையும் குமிழியும் திவலையும் தோன்றுவது போலவும் பிரபஞ்சமும் பல பிரகாரமாயிற்

றென்க. தன்னில் தோன்றிய பிரபஞ்சம் பல பிரகாரமா யிருத்தலால் இவற்றில் தோய்ந்துள்ள பிரம்மமாகிய தானும் பலவாகுமோ எனின் ஆகாது. யோனிபேதம் பலவாயிருந்தாலும் அறிவு ஏகமாகவே இருக்கும். பசுக்கள் பலநிறமாயினும் பால் ஒரு தன்மையா யிருப்பது போலவும் மணிகள் பல நிறமாயினும் அவற்றுள் கோப்புண்ட நூல் ஒரே நிறமாயிருத்தல் போலவும் உடம்புகளில் கலந்து நிற்கும் பிரம்மம் ஒரு தன்மை யாகத்தான் இருக்கும். பிரம்மப் பொருள் உடம்புகள் தோறும் கலந்திருந்தால் அவ்வுடம்புகளால் பந்தப்பட வேண்டுமேயெனில் கண்ணுடியுள் தோன்றும் நிழல் போலப் பிரம்மத்தின் பிரதிபிம்பம் உடம்புகள்தோறும் இருப்பதால் அவை பந்தப்படுவதில்லை. அப்படி பிரம் மமோ அல்லது அதன் பிரதிபிம்பமோ உடம்புகளில் பந்தப்படாது நிற்குமானல் உடம்புகள் அனைத்தும் ஜட மாயிருத்தலால் உடம்புகளுக்கு ஓடியாடுகின்ற தொழில் களும் சுகதுக்கமேரக அனுபவமும் எப்படிக் கூடுமெனின் சொல்லுதும். காந்தம் இருந்தபடி இருக்க அதன் சந் நியில் இரும்பு சேட்டிப்பதுபோல உடம்பு தொழிற்படும் எனவும், பளிங்கை அடுத்த நிறம் பளிங்கை ஊடுருவித் தோன்றினும் பளிங்கு கெடாதவாறு போல சுகதுக்க அனுபவங்கள் நிகழ்ந்தாலும் பிரம்மப் பொருளை அவை தாக்கா எனவும் அறிதல் வேண்டும். கண்ணுடியுள் தோன்றும் ஒருவனுடைய நிழலைக் கண்டு அந்த நிழலின் கண்ணைத் தோண்டுவதற்காகப் பாறைகொண்டு கண்ணுடியைத் தாக்கினல் அதனல் கண்ணுடி உடையு மேயல்லாது அதனுள் தோன்றிய நிழலுக்கு மூலப்பொரு ளான அந்த மனிதன் ஒரு கேடுமின்றித் தானே இருப்பான். அதுபோல உடம்பின் சார்பான புண்ணிய பாவகன்மங்கள் உடம்பைத்தான் தாக்கும் என்பதாம்.

மேற்சொல்லியவாறு அவித்தையால் தோன்றிப் பிரம் மப்பொருளை மறைத்த உலக உயிர் கடவுளர்கள் (ஜக ஜீவபரங்கள்) கெடுவது எப்படி எனில் சொல்லுவோம்.

ஆகாயத்தை மேகம் மறைத்து நின்றது. அதனால் இரு ளுண்டாயிற்று. பின்னர் வாயுதோன்றி அம்மேகத்தை ஒதுக்கவே ஆகாயம் நிர்மலமாய்ப் பிரகாசித்தது போல அந்தப் பிரம்மத்தின் இடத்திலிருந்து விவேகமானது தோன்றி இது நானல்ல இது நானல்ல என்று தத்து வங்களை நியதி பற்றிக் களையவே இந்த அறிவு அந்த பிரம்மமேயாகித் தன்னிடத்திலே தற்சொரூபத்தைத் தரி சித்துக் கொண்டு தன்னிடத்திலுண்டாகிய இன்பத் தைத் தானே அனுபவித்துக் கொண்டு குற்றமற இருக்கும். இன்னும் தத்துவமசி மகாவாக்கியத் தொம் பதம் தத்பதம் அசிபதம் என்னும் இலக்கணை மூன்றும் அறிந்த தெளிந்த அறிவுகொண்டு அந்தப் பிரம்மமே தான் என்கிற பிரம்ம ஞானத்தைத் தீரவிளங்கி, சித்த சலனம் இல்லாதவனாகி இருத்தலே பிர்ம்ம நிஷ்டை எனப்படும். இங்கே நியதி களைதல் எதுபோல எனில், ஒரு வீட்டினை ஒவ்வொரு மரமாகப் பிடுங்கிப்போட வீடென ஒரு பொருளே இல்லாமற் போய்விடுவது போலவும், ஒரு புடவையை ஒவ்வொரு இழையாய்ப் பிரித் தெறியவே புடவை என ஒரு பொருள் இல்லாதது போலவும் தத்துவங்களை ஒவ்வொன்றுக் கண்டு இது நானல்ல இது நானல்ல அதாவது தேகம் நானல்ல இந்திரியம் நானல்ல அந்தக்கரணம் நானல்ல என்று விசாரத்தால் தெளிதலாம். இவ்வாறு தெளிந்து பிர்ம்ம நிஷ்டையிலிருக்கும் பிரம்ம நிஷ்டர்களை அந்தக் கரண வாசனாதிகளோ சுகதுக்க அனுபவமோ ஒன்றும் தாக் காது. பாத்திரத்து நீரில் சந்திரன் நிழல் தோன்று கிறது. அந்தநீர் காற்றால் அசையும் போது சந்திரனும் அசைவது போல் தோன்றுகிறது. உண்மையில் உச்சியிலிருக்கும் சந்திரன் அசையாமலே இருப்பதை நாம் காண்கிறோம். இதுபோலவே சரீர சம்பந்தம் இருந்தாலும் பிராரத்துவ கன்மம் விளைந்தாலும் பிர்ம்ம நிஷ்டன் இவற்றால் தாக்கப்படாதுநின்று சரீரம் விழுந்த மாத்திரத்தில் குடமுடைந்த போது குட ஆகாயமும் மகாகாயமும் ஒன்றாய் விடுதல்போலப் பரப்பிரம்மமே

ஆகிவிடுவான். இவ்வாறு விசாரத்தால் தெளியும் பக்கு வம் இல்லாதவர்கள் கன்மகாண்டத்துட் சொல்லியபடி சாதன சதுட்டயங்களைப் பயின்ருல் அந்தக்கரண சுத்தி யுண்டாகும். அந்தக் கரணசுத்தியால் ஞானம் விளையும். அந்த ஞானம் அகம்பிரம்மம் என்பதை அறிவிக்கும். தீக்கடை கோலாலே அரணியைக் கடைய அதனுலே உண்டான நெருப்பு அக்கோலையும் அரணியையும் ஒரு சேரச் சுட்டுவிட்ட தன்மையைப் போல, சாதன சதுட்ட யத்தால் விளைந்த ஞானம் தான் ஒன்றுமே நிற்க ஏனைய எல்லாவற்றையும் அழித்துப் பரமுத்தியையும் நல்கும் என்பதாம்.



# மெய்ப்பொருள் காண்பதறிவு.

## ஏகான்மவாதம் என்ற கொள்கை ஆய்வு.

---

தத்துவக் கொள்கைகள் இரண்டு வழிகளால் அறிவுறுத்தப் படுகின்றன. ஒன்று: கண்கூடாகக் காணும் காட்சியளவையாலும் அனுமான அளவையாலும் நாம் அறியக் கூடியவற்றை அறிவித்துக் காட்சிக்கும் அநுமானத்திற்கும் எட்டாதவற்றை நூல்கள் வாயிலாக எடுத்துக்காட்டி அறிவிப்பது. "காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின்" எனப் பரிமேலழகர் கூறுவதும் சிவஞானபோத முதற் சூத்திரம் அமைந்துள்ள முறையும் மேலே சொல்லிய வழியைப் பின்பற்றியவை யாகும். இரண்டு: ஏதாவது சில சொற்றொடர்களை அல்லது ஏதாவது ஒரு முடிபினை முன்னமே இலக்காக வைத்துக்கொண்டு அதற்கேற்பக் காட்சி அநுமானம் நூல் எல்லாவற்றையும் திரித்துக் கூறுதல். வேதாந்தக் கொள்கை இந்த இரண்டாவது வழியில் அறிவுறுத்தப் படுகின்றது. "ஏகம் - அத்வைதம் - பிரம்மம்" என்ற சொற்றொடர்களை வைத்துக் கொண்டு சத்தாயுள்ள பிரம்மம் ஒன்றே உள்ளது. ஏனைய உலகம் உயிர் கடவுளராகத் தோன்றுவன அனைத்தும் பொய் (மித்தை) என ஒரு கருத்தை வலிந்து ஏற்றுக் கொண்டு அதற்கேற்ப எல்லாவற்றையும் பொருள் செய்கின்றது. அத்தியாரோபம் அபவாதம் என்ற இரண்டு உத்திகளே வேதாந்தத்திற்கு அடிப்படையா யிருப்பன. அத்தியாரோபம் என்பது ஒரு பொருளில் பிறிதொரு பொருளை ஏற்றுதல். மாலைக்காலத்தில் மந்த அந்தகாரமாக இருக்கும்போது வளைந்து வளைந்து கிடக்கும் கயிறு பாம்பு போலத் தோன்றுகிறது. மணல் வெளியில் கதிரவன் கிரணம் பரவியிருப்பது அலை அலையாகப் புனல்

பெருகுவதுபோலத் தோன்றுகிறது. கயிற்றில் தோன்றிய பாம்பும் கானலில் தோன்றிய நீரும் உண்மையில் அங்கு இல்லாத பொருளே. அவை ஆரோபத்தால் தோன்றின. இதுபோலவே மெய்ப் பொருளாயுள்ள பிரமத்தினிடத்தில் ஆரோபத்தால் உலக உயிர் கடவுளர்கள் தோன்றின. அவ்வாரோபம் அஞ்ஞானத்தால் விளைந்தது. இவ்வுபாதிகளை விசாரத்தால் உணர்ந்து விவேகத்தால் தான் பிர்ம்மம் என்பதை அவ்வறிவு உணரும். அவ்வாறுணர்ந்து பிரம்மமாதலே முத்தி. இதுவே வேதாந்தக் கொள்கையின் அடிப்படையாகும். இவற்றுள் முதலில் அத்தியாரோபம் என்ற உத்தியை ஆராய்வோம். கயிற்றில் அரவு தோன்றியதுதானே அத்தியாரோபத்திற்கு உவமை. முதன் முதலில் இதனைக் காண்போம் கயிற்றரவு என்ற உவமையில் கயிறு ஒரு பொருள். அரவு அங்கில்லை யாயினும் காண்போனுக்கு முன்பு அறிமுகமான பொருளா யிருத்தலால் அரவு ஒரு பொருள். காண்போன் ஒரு பொருள். அரவுக்கும் கயிற்றுக்கும் உள்ள பொதுத்தன்மை ஒரு பொருள். கயிற்றைப் பாம்பாகக் கண்டு பதறுவதற்குக் காரணமான தோஷம் ஒன்று. ஆக இவ்வைந்தும் ஒருங்கு சேர்ந்தாலல்லது ஆரோபம் நிகழமுடியாது. பிரம்மம் ஒரே பொருளா யிருந்து இவ்வைந்துமாக மாறி ஆரோபித்ததா? பிரம்மத்தினிடத்தில் பிரபஞ்சம் தோன்றி மறைத்ததைக் கண்டது பிரம்மமா? சீவனா? பிரபஞ்சம் பிரம்மம் முழுவதையும் மறைத்ததா? அல்லது பிரம்மத்தின் எதாவது ஒரு அம்சத்தை மட்டும் மறைத்ததா? பிரம்மம் முழுவதும் மறைந்து போனால் அதன்பின் ஆரோபம் நிகழப் பொருளே இல்லையே. பிரம்மம் மறையாதிருக்கவே ஆரோபம் நிகழ்ந்ததாயின் பிரம்மம் அறியாமையுடையதாமே. கயிறு, ஜடம், பாம்பு ஜடம். கயிற்றைப் பாம்பாகக் கண்டு மயங்கிய உடம்பும் ஜடம். கயிற்றைப் பாம்பாகக் கண்டு மயங்கியது எது? உடம்பினுள் இருக்கும் கருவி கரணங்கள் எனின் அவை ஜடமாதலால் அவற்றுக்கு அறிவில்லை. பிரம்மமோ எனின்

கருவி கரணங்களில் தோயாதது. ஆதலால் மயங்கியது மூன்ருவது பொருளாக இருக்கவேண்டும். அதாவது முற்றறிவுடைய பிரம்மமு மல்லாத அறிவற்ற ஜடமு மல்லாத மூன்ருவது பொருளாதல் வேண்டுமே. அதனைத்தான் ஆன்மா எனச் சித்தாந்திகள் கூறு கின்றனர். இவ்வாறு உவமையில் உள்ள பொருந் தாமை ஒருபுறம் இருக்க, நித்தமாய் அறிவாய் ஏகமாய் இருக்கும் பரப்பிரம்மம் ஒருகாரணமுமின்றி அவித்தைக்கு ஆளாகி மாயையால் மறைக்கப்பட்டு அவதியுறுமாயின் அத்தகைய பிரம்மம் தான் பிரம்மமே எனத் தெளிந் தாலும் மீண்டும் மீண்டும் அவ்வாறு அவதிக்காளாகாது என்று எப்படிக் கூறமுடியும். பின்னரும் ஒரு காரணமு மின்றியே அவித்தைக்காளாதலும் கூடும் என்றுதான் அறிவுடையார் கொள்வர்.

இனி, பொன் பணி என்ற உவமையை ஆராய்வோம். பொன் பல ஆபரணங்களானது போல, பிரம்மமே உலகம் உயிர் கடவுளராக ஆயிற்று என்று வேதாந்தம் சொல் கிறது. மண்ணைப் பிசைந்து பதமாக்கித் திகிரியைக் கொண்டு குலாலன் பாண்டங்களைச் செய்கின்ருன். இங்கே குடம் முதலியவற்றுக்கு மண் முதற் காரணம். திகிரிதுணைக் காரணம். குலாலன் நிமித்த காரணம். இவ்வாறு மூன்று காரணங்களும் இருந்தாலன்றி ஒரு பொருளிலிருந்து வேறு பல பொருள்களைச் செய்ய முடியாது. பொன் பணியாக வேண்டுமானுல் இந்த மூன்று காரணங்களும் இருந்து தான் ஆகவேண்டும். பிரம்மம் இவ்வாறு பிரபஞ்சம் முதலிய பல வாதற்கும் மூன்று காரணங்கள் வேண்டுமே? அவை எவை? பேராற்றல் சான்ற பிரமத்திற்கு மூன்று காரணங்களும் வேண்டாம். தானே பலவாக முடியும் எனின், தானும் பலவும்தனித்தனி முதலா? ஒரே முதலா? தானே பல ஆயிற்றெனின் சத்து சித்து ஆனந்தம் முதலிய குணங்கள் மாறுபடாதிருக்க வேண்டுமே. பொன்னும் ஆபரணங்களும் மாற்று ஒன்ருயிருத்தல் போலப் பிரம்மமும் பிரபஞ்சமும் அறிவா யிருக்க

வேண்டுமே. பிரம்மம் சித்தாயிருக்கப் பிரபஞ்சம் சடமா யிருக்கின்றதே. சிலம்பியிலிருந்து நூல் தோன்றுகிறது. அங்கே சிலம்பியே முதற்காரணமாயும் நிமித்த காரணமா யும் இருப்பதுபோலப் பிரம்மமே முதற் காரணமாயும் நிமித்த காரணமாயும் இருக்கும் என்றால், சிலம்பி சித்தும் ஜடமும் கலந்த நிலையில் நூல் நூற்பதால் பிரம்மமும் சித்தும் ஜடமும்போல அதாவது உடம்பும் உயிருமா யிருந்து இப்பிரபஞ்சத்தை உண்டாக்கியிருக்க வேண்டும். அப்படி அத்வைத நூல்களில் சொல்லப்பட வில்லையே. காரணகாரிய ஒற்றுமையும் இன்றிச் செய்வோனும் செயப் படு பொருளும் என்ற வேற்றுமையும் இன்றி இந்த உவமை எடுத்தாளப்படுகிறது. உவமைக்கும் பொருளுக் கும் சம்பந்தமே இல்லை என்பதை அறிவுடையார் சிந்தித்து உணரக் கடவர்.

இனி, பிரபஞ்சம் மித்தை என்ற கருத்து ஆராய்தற் குரியது. உடம்பு வேறு உயிர் வேறு என்பதையும் உலகம் நிலையாதது என்பதையும் நமது நாட்டில் கல்லாத மாந்தரும் நன்கு உணர்வர். நிலையாத பொரு ளைத் துணையாகக் கொண்டு நிலைத்த பேரின்பத்தைத் தேடிக்கொள்ள வேண்டும் என்றே திருவருள் பெற்ற மெய்ஞ்ஞானிகள் கூறியுள்ளனர். பிரபஞ்சம் அறவே பொய் என்பது பிரம்மத்திற்கு அபின்ன சத்தியான மாயை ஒன்று உண்டு என்று சொல்லிய சொல்லுக்கும் பிரத்தி யட்ச அநுபவத்திற்கும் விரோதமாகும். எந்த ஒரு பொருள் தனது தோற்றத்துக்கு முன்னும் தனது அழி விற்குப் பின்னும் இல்லையோ அது முக்காலத்தும் இல்லாத பொருளே என உலகம் இல்பொருள் என்ப தற்கு நியாயம் கூறப்படுகின்றது. மாயை தோற்றத் துக்குமுன் இல்லை என்பது வேத விரோதமாகும். தோற் றத்துக்குமுன் காரணமாய் அருவாய் சூக்குமமாய்ப் பிரம்மத்தை ஆதாரமாகக் கொண்டிருந்த மாயை காரியா வஸ்தையில் பிரபஞ்சமாய்த் தனுகரண புவன போகங் களாய் விரிவடைந்தது. மகா சங்கார காலத்தில்

மீண்டும் காரண நிலையில் அடங்கிக்கிடக்கும். இவ்வாறு காரண காரிய அவஸ்தை வேறுபாடடைவதே யல்லாமல் மாயை இல்பொருளாதல் ஒரு ஞான்றும் இல்லை. விசார சாகரம் ஐந்தாவது தரங்கம் "சுத்த பிரமத்தை ஆஸ்ரயித்துக் கொண்டிருக்கும் மாயை" என்று கூறுகின்றது. இல்லாத பொருள் தோன்ருது. உள்ள பொருள் அழியாது. ஆதலால் கண்கூடாக நாம் அநுபவித்து உணரும் மாயையினை இல்பொருள் என்பதுதான் பிராந்தி. முயற்கோடு போல என்ற உவமையும் முயலிடத்துக் கொம்பில்லை என்பதைத்தான் குறிக்குமே தவிர முயலும் இல்லை கொம்பும் இல்லை என்று பொருள் தராது, கனவிற் கண்டது நனவில் பொய்யாதல் போல உலகம் பொய்யாயின் குரு உபதேசம் சாத்திர விசாரம் சாதன சதுட்டயம் அனைத்தும் பொய்யாக வேண்டும். தவிர கனவு சூக்கும உடலோடு ஆன்மா செய்யும் விவகாரம். நனவு தூல உடலோடு செய்யும் விவகாரம். கனவும் நனவு போல மெய்யாவதே தவிரப் பொய்யாவதில்லை. பெரியோர்கள் பலர்க்கும் பல உண்மைகள் கனவில் உணர்த்தப் பெற்றன என்பதை அவர்கள் வரலாற்றின் மூலம் அறிகின்ருேம். பேராசைக்காரன் அல்லது பெருநோயாளன் கனவு, கண்ட அவனது மனத்தின் பிரதிபலிப்பாகும். உடற் கோளாறு அல்லது மனக்கோளாறு காரணமாக உண்டாகும் கனவுகள் தவிர மற்ற கனவுகள் அனைத்தும் உண்மையை அறிவிப்பவைதான் என்று அறிவுடையார் ஆய்ந்து முடிவுகட்டி யிருக்கிருர்கள். இல்பொருள் ஒரு காலத்தும் ஒரு பிரகாரமாகவும் தோன்ருது. உள்பொருள் என நாம் உணரும் எப்பொருளும் ஒரு காலத்திலும் இல்பொருளாகாது. சிற்றறிவுடைய நாம் உடம்போடு கூடியும் பிரிந்தும் மாயையின் வல்லபத்தையும் எல்லையையும் அறியமாட்டாதவர்களாயிருத்தலால் அதனை முன் இல்லாதது என்ருே பின் இல்லாதது என்ருே சாதிப்பது அறிவுடைமை யாகாது.

இனி, பிரமத்தின் பிரதிபிம்பம் ஈசுரனுகவும் சீவர்களாகவும் ஆயிற்று என்பதை ஆராய்வோம். கதிரவனுடைய சாயை தண்ணீர் முகந்து வைக்கப்பட்ட பாத்திரங்கள் தோறும் தோன்றுவது போலப் பிரமத்தின் சாயை அந்தக்கரணங்கள் தோறும் பிரதிபிம்பிக்கிறது. ஆதித்தன் சாயையைக் காண்பான் வேருயிருத்தல் போலப் பிரம்மத்தின் சாயை அந்தக்கரணங்களில் இருப்பதைக் கண்டறிந்தது வேருேர் அறிவுடைப் பொருளாதல் வேண்டுமே? அது எது? நிழலில் இருக்கும் பாத்திரத்துத் தண்ணீரில் கதிரவன் சாயை விழாதவாறு போலப் பிரமம் பிரதிபிம்பிக்காத உடம்பும் இருத்தல் வேண்டும். அகண்டிதமாய் அருவாய் இருக்கும் பிரமம் உருவக் கூட்டிற்குள் பிரதிபிம்பிப்பது எப்படி சாத்தியமாயிற்று? அனைத்து உடம்புகளிலும் பிரதிபிம்பித்திருப்பது ஒரே பிரம்மமாயின் ஒருஉடம்பு நிற்கும்போது ஒரு உடம்பு ஓடுகின்றது, ஒரு உடம்பு உறங்குகின்றது, என்பன போன்ற வேறுபாடுகள் நிகழக் காரணமென்ன? இவ்வாறு உலக விவகாரங்களில் உடம்புகள் தோறும் பிரதிபிம்பித்திருக்கும் பிரமம் அவ்வவ்வுடம்புகளின் தொழிற்பாட்டால் தாக்கப்படாதா எனின் தாக்கப்படாது. கண்ணுடியுள் தோன்றிய நிழல் போலப் பிரம்மத்தின் சாயை தோய்வற நிற்கும். அப்படியானுல் தேகங்கள் சேட்டிக்கக் காரணம் என்ன? கண்ணுடியுள் தோன்றும் நிழலால் கண்ணுடி அசைக்கப்படவில்லை. ஆனுல் பிரம்மத்தின் சாயையால் உடம்பு ஆட்டிவைக்கப் படுகின்றது. அதற்குக் காரணம் என்ன எனில் காந்தத்தின் சந்நிதியில் இரும்பு தொழிற்படுவது போலப் பிரம்மம் அசைவற இருக்க அந்தக்கரணங்களும் பிரபஞ்சமும் தொழிற்படுகின்றன என்று கூறப்படுகிறது. பிரம்மப் பொருள் அகண்டிதம். அதன் சந்நிதி இல்லாத இடம் இல்லை. அப்படியிருக்க அதன் சந்நிதியில் உடம்புகள் மட்டும் சேட்டிக்க ஏனைய பொருள்கள் சேட்டிப்பின்றி இருப்பானேன்? தவிரவும் காந்தத்தின் சந்நிதியில் இரும்பை நேரொக்கப் பிடிப்பாரொருவர் இருந்தால் காந்தம்

இரும்பை வலித்துக் கொள்ளும். அதுபோல இங்கே உடம்பையும் பிரம்மத்தையும் நேராகச்சேர்த்த வேருரு முதல் வேண்டும். காந்தம் தான் வலித்துக்கொண்ட இரும்பினைத் தானே விடுவதில்லை. பிரம்மத்தின் சாயை தான் சார்ந்த உடம்பை விட்டு நீங்கி விடுகின்றது. இவற்றை யெல்லாம் சிந்தித்துப் பார்த்தால் பிரம்மத்தின் சாயைதான் உடல்தோறும் தோன்றுவது என்பதும் கண்ணுடியுள் நிழல்போல அது தோய்வற நிற்கும் என்பதும் பொருந்தாது என்பது விளங்கும். உடல் தோறும் சுகதுக்க மோக அனுபவம் நிகழ்கின்றதே.அந்த அநுபவம் பிரம்மத்தைச் சாராதோ எனின் சாராது. படிகக்கல்லின் கீழிருக்கும் பொருளின் நிறம் படிகக்கல்லை ஊடுருவித் தோன்றினுலும் படிகக்கல் தோய்வற நிற்றல்போலச் சுகதுக்க மோக அநுபவங்கள் அந்தக் கரணங்களைத்தான் சாருமேதவிரப் பிரம்மத்தைச் சாராது எனக் கூறப்படுகின்றது. சுகதுக்க மோக அநுபவம் அறிவுடைப் பொருளுக்குத்தான் உரியது என முன்னே சொல்லி இங்கே அந்த அநுபவம் பிரம்மத்துக்கில்லை உடம்புக்குத்தான் என்று சொல்வது மாறுகொளக் கூறல் என்னும் குற்றத்தின்பாற்படும். நரை திரை தொழுநோய் முதலியவற்ருல் தாக்கப்பட்டாலும்கூட இவ்வுடம்பைப்பிரிய மனமில்லாமல் ஆர்வம் செய்து நிற்பதையும் காலன் வருங்காலத்திலும் இவ்வுடம்பை விட மனமில்லாமல் வேதனைப்படுவதையும் கண்டு வைத்தும் பிரம்மம் இவ்வுடம்பில் தோய்வில்லை என்று கூறுவது எவ்வளவு விபரீதமான புத்தி என்பதை அறிஞர்களே சிந்தித்துணர்வார்களாக. உலண்டு என்ற புழுவானது தன்னிடத்தினின்றும் தோன்றிய நுண்ணிய நூலால் தனக்குக் கூடாகப் பண்ணித் தான் அதற்குள் புகுந்து பின்னைத் தானுகப் புறப்படமாட்டாமல் இறந்த தன்மை போலப் பிரம்மமும் மாயாகாரிய சரீரத்துக்குள் புகுந்து ஐம்புலனுகர்ச்சியில் மயங்கி இதனைவிட்டு வெளியேறவும் மனமின்றி நிற்பதால் இப்படிப்பட்ட பிரம்மத்திற்குச் சர்வ முதன்மையும் சர்வஞ்ஞத்துவமும்

இல்லை யென்பது தேற்றம், முழு அறியாமையிற் கிடந்த சீவாத்மா கருவி கரணங்களின் துணையால் சிறிது சிறிதாக அறிவு விளங்கி வருவதும், சீவாத்மா அறிவு வளர்ந்து ஞான மோக்ஷத்தைப் பெறச் சிவபெருமான் பெருங்கருணை உபகரித்து வருவதும் தேற்றமான உண்மையாயிருக்க, இதனை மறுத்து, பரமாத்மா ஒன்றே உளது எனக்கூறி அந்தப் பரமாத்மாவையும் ஈசுரனாகவும் சீவனாகவும் மாற்றிய தோடமையாமல் ஜடப்பொருளான மாயையாகவும் மாற்றிய தோஷமும் இங்கே கிஞ்சிக்ஞன் நான் என்ற உண்மையை உணர்ந்திருந்தும் அந்தப் பிரம்மமே நான் என்ற வரட்டு வாதம் பேசி அதனால் விளையும் சிவத்துரோகமாகிய தோஷமே சம்பவிப்பதாயிற்று.

இனி, அடுத்தபடியாக ஆராயவேண்டுவது பரமுத்தியைப் பற்றிய கருத்தாகும். எங்கும் பரவியிருக்கும் ஆகாயம் கடத்துக்குள்ளும் இருக்கிறது. கடம் உடைந்தால் கடத்துள்ளிருக்கும் ஆகாயம் பராகாயத்தோடு ஒன்ருகிவிடுவது போலச் சரீரத்தை விட்ட ஆன்மா பரமான்மாவாகிவிடும். இதுவே முத்தி. இங்கே ஆகாயம் கடத்துக்குள் இருந்தபோது ஒரு துக்கத்தையும் அனுபவித்ததில்லை. ஒன்றை இழந்ததுமில்லை. பின்னர்ப் பராகாயத்தோடு சேர்ந்த வழியும் பெற்றது ஒன்றுமில்லை. ஆதலால் இந்த உவமை பொருத்தமாக இல்லை. ஏனெனில் ஆன்மா உடம்பினுள் கட்டுண்டதால் கன்மங்களையீட்டிப் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து தத்தளிக்கிறது என்றும், குருவை யடுத்து உபதேசம் பெற்று ஞானம் விளைந்ததால் பிறவி ஒழிந்து பேரின்பமடைந்தது என்றும் சொல்லுவதற்கு விரோதமாக அமைந்தது, மேலே சொல்லிய உவமை. தவிரவும் அறிவு ஒன்ருயிருத்தலால் ஒருவர் முத்தியடைந்தால் எல்லோரும் முத்தியடைய வேண்டும். அவ்வாறு அடையக் காணேம். ஞானம் வந்தவர்கள் முத்தியடைவர் ஏனையோர் அடையார் எனின் ஞானம் வந்த அறிவு ஞானம் வராத அறிவு

எனப் பல்வேறு அறிவுகள் இருத்தல் வேண்டுமே? ஏகம் ஏகம் என்று சொல்வது எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் விபரீதமான கருத்தாகத்தானே தோன்று கிறது.

பிரம்ம ஞானம் கைவரப் பெறுதற்கு வழி யாதெனில் தத்துவங்களை நியதிபற்றிக் களைதலாகும். தத்துவங்கள் அவித்தையின் விளைவு. பிரம்மமோ வித்யாசொரூபம். கதிரவன்முன் இருள் நில்லாது. இருளின்முன் கதிர வன் இருக்க முடியாது. அதுபோலப் பிரமத்தின்முன் தத்துவங்கள் ஜடமாதலின் முனைந்து நில்லா. தத்து வங்கள் பிரம்மத்தைச் சார்தலும் இல்லை. தத்துவங் களை நியதிபண்ணிக் களைவது எது? பிரம்மமா? தத்து வங்களா? பிரம்மத்தின் பிரதிபிம்பமா? பிரம்மம் சர்வஞ் ஞத்துவம் உடையதாதலின் அது நியதிபற்றிக் களைய வேண்டியதில்லை. தத்துவங்கள் அறிவற்ற ஜடப்பொரு ளாதலின் அவற்றுக்கு நியதிபற்றிக் களையும் தகுதி யில்லை. பிரமத்தின் பிரதிபிம்பம் தோய்வற நின்று எத ஞலும் தாக்கப்படாதது ஆதலால் அதுவும் நியதிபற்றிக் களையாது. இல்லை பிரம்மத்தின் பிரதிபிம்பம்தான் நியதி பற்றிக் களையும் எனின் பிரதிபிம்பம் அனைத்தும் நியதி பற்றிக் களைதல் என்ற ஒரே காரியத்தைத்தான் செய்ய வேண்டும். ஆதலால் தத்துவக் கூட்டங்களோடு கலந்து நின்று பயன்பெறக் கூடியதும் தத்துவத்தின் சமூகமேதான் என்று எண்ணி மயங்கக்கூடியதும் தத்து வங்களல்லாத சித்துப் பொருளுமான ஆன்மாதான் நியதிபற்றிக் களைந்து தத்துவங்களினீங்கிப் பரமாத்மா என்னும் இறைவன் திருவடிநிழலை அடையும் என்பதை ஊன்றி உணர்வார்களாக. ஒளியோடு கூடினல் ஒளியை யும் இருளோடு கூடினல் இருளையும் அனுபவிக்கும் இரு வேறுவகை இயல்பினையுடைய கண்ணைப்போலத் தத்துவங்களோடு கூடினல் தத்துவத்தையும் சிவத் தோடு கூடினல் சிவத்தையும் அனுபவிக்கும் இரு வேறுவகை இயல்பினையுடையது ஆன்மா. ஆன்ம அறிவிற்கு உள்நின்று அறிவிப்பது இறையறிவு.

பிரம்மம் தன்னில் உள்ள சுகத்தைத் தான் அநுபவிக்கும் என்று சொல்லப்படுவதால் முத்தியடைவதற்கு மூன் சுகத்தை அனுபவிக்காமல் இருந்திருக்க வேண்டும். முன்பே சுகானுபவம் இருந்திருக்குமாகில் சரீரக் கூட்டிற்குள் வந்து துக்காநுபவத்தை அடைவதற்குக் காரணம் வேண்டும். ஆதலால் பரப்பிரம்மம் ஒருநாளும் துக்காநுபவத்தை யறிந்ததில்லை. இன்பப் பிழம்பாய் இருப்பது அது. பேரின்பத்தை அநுபவிக்கும் தகுதியுடையதாய் அப்பேறு கிடைக்கப்பெருமல் பிறந்திறந்துழலும் ஆன்மாவைப் பரப்பிரம்மமாகிய ஆண்டவன் கரையேற்றித் தனது எல்லையற்ற ஆனந்தத்தை அநுபவிக்கச் செய்வன் என்பதே ஒப்புக்கொள்ளத் தக்கது.

இனி தத்துவமசி வாக்கியத்தைப்பற்றிச் சிந்திப்போம். தத் = அது, துவம் = நீ, அசி = ஆகின்ருய். அது நீ ஆகின்ருய் என்ற இத்தொடரை நீ அது ஆகின்ருய் என்றும் மாற்றிக் கொள்ளலாம். அதுவே நீ அல்லது நீயே அது என்று சொல்லாமல் அது நீ ஆகின்ருய் என்ற தொடரில் ஆகின்ருய் என்ற ஆக்கச் சொல் சேர்ந்திருக்கின்றது. நீ புலி ஆயினை என்ருல் நீ புலியே என்று பொருள் செய்ய முடியுமா? நான் நோயாய்க் கிடந்தேன் என்ருல் நான் நோயே என்று பொருள் செய்ய முடியுமா? அது நீ ஆகின்ருய் என்பதனுல் அதுவேறு நீ வேறு. இப்போது நீ அது ஆனுய் என்றுதான் பொருள் செய்ய வேண்டும். அது என்ற பொருளாக நீ ஆகின்ருய் என்பதால் பரமாத்மா வேறு சீவாத்மா வேறு என்பதுதான் சித்தித்ததே தவிர ஒரே ஆன்மாதான் உள்பொருள் என்பது சித்திக்கவில்லை. ஈசுரனையும் சீவனையும் மும்மூன்று கூறுகளாக்கி அவற்றுள் ஈசுரனையும் சீவனையும் வேற்றுமைப்படுத்தும் இரண்டிரண்டு கூறுகளை நீக்கிவிட்டால் ஆன்மா ஏகம் என்பது புலனுகும் என்று ஏகான்மவாத நூல்கள் கூறுகின்றன.

மாயை — மாயையில் தோன்றும் பிரதி பிம்பம் — மாயையின் அதிஷ்டான சேதனம். இம் மூன்றும் சேர்ந்தது முற்றறிவு முதலிய குணங்களையுடைய ஈசுரன். அவித்தை -- அவித்தையில் தோன்றும் பிரதிபிம்பம் --- அவித்தையின் அதிஷ்டான சேதனம் இம் மூன்றும் சேர்ந்தது சிற்றறிவு முதலிய குணங்களையுடைய சீவன். இவற்றுள் பிரதிபிம்பத்தோடு கூடிய மாயையையும் மாயா காரியமான முற்றறிவு முதலிய குணங்களையும் ஈசுரனி லிருந்து நீக்கிவிட வேண்டும். அவ்வாறே பிரதிபிம் பித்த அவித்தையையும் அவித்தையின் விளைவாகிய சிற்றறிவு முதலிய குணங்களையும் சீவனிலிருந்து நீக்கி விட வேண்டும். அவ்வாறு நீக்கியபிறகு மாயையிலும் அவித்தையிலும் அதிஷ்டானமாகிய சேதனமட்டும் தான் எஞ்சியுள்ளது. அதுதான் ஏகமாயுள்ள ஆன்மா. இவ்வாறு அறிவது, விட்டும் விடாத இலக்கணையாகும். மனிதன் நெடுக்காக இருக்கிறன். விலங்கு குறுக்காக இருக்கிறது. மனிதனையும் விலங்கையும் ஒன்ருக்க வேண்டுமானல் மனிதனைக் குறுக்காக நடக்கவைத்தோ அல்லது விலங்கின் முன்னங்கால்களைப் பிடித்துத் தூக்கி நடக்கவைத்தோ ஒன்ருக்கலாம் என்று யாராவது சொன்னல் அச்சொல்லுக்குள்ள மதிப்பே மேற்கூறிய விட்டும் விடாத இலக்கணை பெறும். பரப்பிரம்மத்தை மறைத்த மாயை அதன் பிரதி பிம்பத்திற்கு சர்வஞ்சத் துவம் முதலிய குணங்களைக் கொடுத்து ஈசுரனுக்கி உலகத்தைப் படைத்துவிட்டது என்று கூறுவது மிக வும் விந்தையாகும். சடப்பொருளாகிய மாயைக்குச் சர்வ வல்லமையும் கற்பித்துப் பேசுவது மாயாவாதமே தவிர வேறென்ன வாதம் என்று சொல்ல முடியும்.

பேரின்ப அநுபவ நிலையில் ஆன்மாவும் சிவமும் வேறு பிரித்தறிய முடியாததாய்க் கலந்து நிற்கும் இவ்வாறு ஆன்மா சிவமாதற்குச் செய்யும் பாவனையில் சிவம் வேறு தான் வேறு என்று பாவித்தால் அப்பாவனை முதிராது; பயன் தராது. அதனல் அச் சிவமே நான்.

என்று உறுதியாகப் பாவித்தால் அப் பாவனை முதிர முதிரத் தற்போதம் நழுவ நழுவச் சிவபோதம் மேலிடும். அவ்வாறு தற்போத ஒழிவில் சிவபோதம் மேலிட்டுச் சிவமேயாதல் சித்தாந்த முத்திநிலையாகும். "வேதாந்திக்குப் பெத்ததிசைபோல" முத்தியிலும் நானென்பது தொடர்தலின் அத்துவிதமான ஆகம முடிவாகிய மௌனம் வேதமுடிவிற்கு முடிவு எனவும்,

'கண்ணினால் கண்ட காட்சியெல்லாம் கண்ணாகாதவாறு போல எம்மால் எதிரிட்டு அறிந்த வெல்லாம் யாமல்லேம் இவை மித்தியா ரூபம் என்று அவற்றை நீக்கி நின்ற வேதாந்தியாருக்கும் அங்ஙனம் எதிரீடாய்த் தோன்றுவன யாவும் இன்றிச் சருவ சூனியமாய் இருந்த பிரம்மம் நாம் என்று இச் சூனியத்தில் தற்போதம் ஊன்றி நிற்றல் விடாது.''

எனவும் ஒழிவிலொடுக்க உரையில் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் அருளியிருப்பது இங்கே சிந்தித்தற்குரியது. ஏகம் என்பது இறைவன் ஒருவனே என்பதைக் குறிப்பது. இறைவன் தனது சத்தியினால் (சூரிய கிரணம் உலகெங்கும் பரவி நிறைந்து நிற்றல் போல) பசு பாசங்களில் ஒழிவற நிறைந்து நிற்பன். அங்ஙனம் தான் ஒருவனாயிருந்தே தனது சத்தியினால் பசு பாசங்களில் ஒழிவற நிறைந்து நிற்றல் அத்துவித நிலையாகும். இதனையே "ஏகமேவ அத்விதீயம் பிரம்மம்'' என உபநிஷதங்கள் குறித்தன. ஆன்மாக்கள் அசத்தாகிய பிரபஞ்சத்தின் துணையாலும் உள் நின்று உணர்த்தும் திருவருள் துணையாலும் சத்தாகிய சிவத்தை உணர்ந்து அதன் திருவடியை அடையும் என்ற முடிவு தான் அறிஞர் கொள்ளத் தக்கது.



# பெரியபுராணத் திறவு.

புராண வடிவில் எழுந்த ஒரு ஞான நூல் பெரிய புராணமாகும். சைவசமயத் திருத்தொண்டர் அறுபத்து மூவர் வரலாற்றினை விரித்துக் கூறுவது அந்நூல். செயற்கரிய செயல்கள் பலவற்றையும செய்து திருவருள் உண்டு என்பதை உலகுக்கு உணர்த்தியவர்கள் அத்தொண்டர்கள். அவ்வாறு செயற்கரிய செய்த பெரியோர்களைப்பற்றிக் கூறுவதால் அந்நூல் பெரிய புராணம் எனவே வழங்கப்பெறுவதாயிற்று. பெரிய புராணத்துக்குச் சில தனிச் சிறப்புக்கள் உண்டு. ஒன்று:- அந்நூலுட் காணப்படும் தொண்டர்கள் எவ்வளவு உயர்ந்த ஞானச் செல்வர்களோ அவ்வளவு உயர்ந்த ஞானச் செல்வர் அந்நூலின் ஆசிரியர் சேக்கிழார் பெருமானும் என்பது. இரண்டு :- அந்நூலுட் கூறப்படும் சரிதங்கள் அனைத்தும் கல்வெட்டுக்கள் முதலிய புறச்சான்றுகளாலும் தேவாரம் முதலிய அகச்சான்றுகளாலும் (Internal and external evidences) நிருபிக்கப்பட்ட உண்மை நிகழ்ச்சிகள் என்பது. அதாவது அச்சரிதங்கள் கற்பனை செய்யப் பெற்றவை யென்றோ சந்தேகத்திற் கிடமானவை யென்றோ நேர்மையுள்ள அறிஞர் எவரும் கூறத் துணியார். மூன்று:— இப்போது நம் நாட்டில் வழங்கும் எல்லா மரபினரும் அத் தொண்டர் திருக்கூட்டத்தில் இடம்பெற்றிருக்கின்றனர். அவர்கள் அனைவரும்தெய்வ சந்நிதியிலும் மெய்யன்பர்கள் திருவுள்ளத்திலும் ஒரு குலத்தவர் போலச் சமமாகவே போற்றப்பெறுகிறார்கள். அந்தணர் — அரசர் — வணிகர் — வேளாளர் — குயவர் — பாணர் — வேடர் — பறையர் — செம்படவர் — வண்ணார் — மருத்துவர் — மறவர் — பௌத்தர் முதலிய அனைவருடைய தொண்டு முறைகளும் பெரிய புராணத்தில் விளக்கமாகக் கூறப்படுகின்றன. சாக்கியர்

என்பவர் பௌத்த சமய வேடத்தில் இருந்தும் மன உணர்வால் சைவராக விளங்கினர் ''மறு சமயச் சாக்கியர் தம் வடிவினல் வருந்தொண்டர்'' என அவரைப் பெரிய புராணம் குறிக்கின்றது. மற்றும்,

செய்வினையும் செய்வானும்
அதன் பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும்
விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி
யல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவனென்
றருளாலே உணர்ந்தறிந்தார்.
எந்நிலையில் நின்ருலும்
எக்கோலங் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள்
மறவாமை பொருள்என்றே
துன்னியவே டந்தன்னைத்
துறவாதே தூயசிவம்
தன்னைமிகும் அன்பினல்
மறவாமை தலைநிற்பார்.

எனவும் சாக்கியரைப் பற்றி அப்புராணம் கூறுகின்றது. எனவே பௌத்த சமய வேடத்திலிருந்தும் உறுதியான சிவபக்தி பூண்டமையால் அப்பெரியவரும் சைவசமயத் திருத்தொண்டராயினர். அதுமட்டுமா? மங்கையர்குலத்தின் மாண்பினை விளக்கவந்த ஞான விளக்குப் போன்ற காரைக்காலம்மையார் — மங்கையர்க்கரசியார் — திலகவதியார் முதலிய மாதர் திலகங்களும் திருவருள் விளக்கத்திற்குக் காரணமாக இருந்திருக்கிருர்கள். ஆகவே எல்லோரும் உயர் நிலையை அடையலாம் என்பதற்கு இவற்றைவிட வேறென்ன சான்று வேண்டும் ஜைன சமயத் தலைமைப் பீடத்தில்

தருமசேனர் என்ற பெயரோடு வீற்றிருந்த மருள் நீக்கியார் சைவ நெறிக்கு மீண்டு திருநாவுக்கரசர் என்னும் அழகிய பெயரோடு சைவசமய முதல்வராக இன்றும் விளங்குகிருர். இவ்வளவு விரிவான அடிப் படையில் அமைந்த ஒரு சமய நூல் இதுவரை உலகப் பகுதியில் வேறெம் மொழியிலும் தோன்றவில்லை எனலாம்.

## உலகப் பொது நூல்.

பெரிய புராணத்தை ஒரு உலகப் பொது நூலாக இங்குச் சிந்திப்போம். பெரிய புராணத் தொண்டர்கள் ஒருகாலத்தவரல்லர்; ஓரிடத்தவரல்லர். ஒரே நாகரிகத் தைச் சேர்ந்தவர்களுமல்லர். பல்வேறிடங்களில் பல் வேறு நாகரிகத்தில் வாழ்ந்தவர்கள். அத்தகையோர் களின் பல்வேறு வகைப்பட்ட வாழ்க்கைத் தொகுப்பே பெரிய புராணமாக அமைத்துள்ளது. அந்நூலுட் காணப் பெருத வாழ்க்கை நிலையே உலகப்பகுதியில் இல்லை எனலாம். அதாவது மிகப் பெரியவர்களாயினும் சரி, சாமானியர்களாயினும் சரி. ஒவ்வொருவர் வாழ்க் கைக்கும் ஏற்ற ஒவ்வோர் உதாரணம் அந்நூலுட் காணலாம் என்பதே. ஏசுநாதர் — மகம்மது நபி — கௌதம புத்தர்-மகா வீரர்போன்ற உயர்ந்த இலட்சியங் களைக் கொண்ட. பல தொண்டர்களையும் அங்கே காண லாம். தீமை செய்பவனுக்கும் கருணைகாட்டி மன்னிக்க வேண்டும் என்பதைச் சிறந்த செயலாக அறிவுறுத்தி ஞர் ஏசுநாதர். மெய்ப்பொருள் நாயனுர் என்ற சிற்றரசரும், ஏனுதி நாதர் என்ற வாள் வீரரும் அந் நெறியிலே நின்று தங்கள் சிவபக்தியை உறுதி செய் தார்கள். வாளேந்தியும் தீமையைத் தடுக்கலாம் என்று மகம்மதுநபி கருதினுர். இங்கே எறிபத்தர் என்ற தொண்டர் அத்தகைய கொள்கையை மேற்கொண்டிருந் தார். மகாவீரரும், புத்தரும் அகிம்சை ஜீவகாருண்யம் இவற்றைச்சிறப்பாகப் போதித்தனர். இங்கே கழறிற்றறி வார் என்ற சேரமன்னர் அவ்வாறு விளங்கினுர். அவர்

அரசாட்சியை ஏற்றுக்கொள்ள நேர்ந்தபோது, "அன்பு நிலைக்கு மாறுபடாமல் எல்லா உயிர்களையும் பாதுகாக்க முடியுமானால் அரசாள்வேன். இல்லையானால் அரசாட்சி வேண்டாம்" என ஆண்டவனைப் பிரார்த்தித்து நின்றார். அப்போது ஆண்டவன் எல்லா உயிர்களின் பாஷையையும் புரிந்துகொள்ளும் அறிவுத் திறனைக் கொடுத்து அரசாளவும் அனுமதித்தான். அதன் பின்னரே "கழறிற்று அறிவார்" என்ற பெயரோடு சேர மன்னர் அரசு புரிந்தார் எனப் பெரிய புராணம் கூறுகின்றது. அதுமட்டுமல்லாமல் "மூவேந்தர் மொழி வழங்கும் நாட்டுக்கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமையோரும்" என உலகமெங்கும் தோன்றிய தெய்வத் தொண்டர்களையும் அந்நூல் போற்றுகின்றது என்றால் நமது முன்னோர்களின் பரந்து விரிந்த மனப்போக்கை எவ்வாறு போற்றுவது. இந்த அடிப்படையில் நின்று சிந்தித்தால் பெரியபுராணம் ஓர் உலகப் பொதுநூல் என்பது புலனாகும். அத்தகைய பொது நூலை, பெரு நூலை ஆக்குவதென்றால் எளிதான காரியமா! ஆழ்ந்த உலக அனுபவம் - நாட்டு வரலாற்று உண்மையறிவு- அமைந்த தெளிவான புலமைத்திறம் - உண்மை ஞான அனுபவ நிலை இவையனைத்தும் ஒருங்கு சேர்ந்தாலல்லது பெரிய புராணம் போன்ற சிறந்த நூலை ஆக்குதல் இயலாது. அதன் பெருமையைச் சேக்கிழார் புராணச் செய்யுள் ஒன்று தெளிவாக்குகிறது.

கருங்கடலைக் கைநீந்திக் கொள எளிது
முந்நீர்க் கடற் கரையின்
நொய்ம்மணலை எண்ணி யளவிடலாம்-
பெருங்கடல்மேல் வருந்திரையை
ஒன்றிரண்டென் றெண்ணிப் பிரித்தெழுதிக்
கடையிலக்கம் பிரித்து விடலாகும்
தருங்கடலின் மீனையள விடலாகும் வானத்
தாரகையை யளவிடலாம் சங்கரன் தாள்தமது,

சிரங்கொள் திருத்தொண்டர் புராணத்தை
யளவிடநம் சேக்கிழார்க்
கெளிதலது தேவர்க்கும் அரிதே

என்பது அச்செய்யுள்.

## பெரியபுராணத் தோற்றம்.

பெரிய புராண ஆசிரியர் சேக்கிழார் பெருமான் என்பதை முன்னரே கூறியுள்ளோம். பன்னிரண்டாம் நூற்ருண்டின் முதற்பகுதியில் வாழ்ந்தவர் அம்முனிவர். இரண்டாம் குலோத்துங்கன் என்ற அநபாய சோழனிடம் மந்திரியாக விளங்கியவர். அம்மன்னவனைச் சிவநெறியில் தீவிரமாக அழுந்தும்படி செய்யவே பெரிய புராணத்தை யருளிச்செய்தார். தேவார திருவாசகங்களோடு சமமாக வைத்துப் போற்றப் பெறுவதே அப்புராணத்தின் பெருமையை நன்கு எடுத்துக் காட்டும். ஆண்டவன் அருள் துணையின்றி மெய்யன்பர்கள் வரலாற்றினை நாம் எழுதமுடியாதே என்று எண்ணிய சேக்கிழார் தில்லையம்பதிக்குச் சென்று பொன்னம்பலவாணர் சந்நிதியில் ஒன்றிய மனத்தோடு நின்று தியானித்தார். அப்போது ஆண்டவனே பெரியபுராணத்தைப் பாடுவதற்கு உலகெலாம் என முதலெடுத்துக் கொடுத்தார். அந்த அருள் வாக்கே முதலாகக் கொண்டு "உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்" என ஆரம்பித்துப் புராணத்தை நிறைவேற்றினுர் ஆசிரியர். அன்றியும் உலகெலாம் என்ற அந்த ஞான மொழியை "ஓதியேறினுர் உய்ய உலகெலாம்" எனப் புராணத்தின் நடுவிலும், "நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்" எனப் புராணத்தின் முடிவிலும் வைத்துப் போற்றிப் புகழ்ந்தார்.

## தொண்டர்கள் சிறப்பு.

இனி அத் தொண்டர்களின் சிறப்புக்கள் சிலவற்றை ஈண்டு சிந்திப்போம். அவர்கள் அனைவரும்

பல பிறவிகளிற் செய்த தவப்பயனுய்த் தோன்றி உலகத்தார்க்கு மெய்த்தொண்டினை அறிவுறுத்தியவர்கள். "உள்ளம் நிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றில் தெள்ளி வடித்தறிந்த பொருள் சிவன் கழலிற் செறிவென்றே" கொண்டவர்கள். தேடிய மாடும் நீடு செல்வமும் தில்லை மன்றுள் ஆடிய பெருமான் அன்பர்க்காவன ஆகும் என்று தங்கள் செல்வத்தையெல்லாம் ஆண்டவனுக்கும் அடியார்கட்குமே அர்ப்பணித்தவர்கள். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் நிலைக்கேற்ப ஏதாவதொரு சிவ தருமத்தை வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள். ஒருவர் சிவாலயத்தில் குங்கிலியத்தைத் தூபம் இடுவதைத் தம் பணியாகக் கொண்டிருந்தார். அடியவர்கட்குத் திருவோடு கொடுத்து மகிழ்ந்தார் ஒருவர். ஒருவர் அடியவர்க்கெல்லாம் கோவணம் கொடுத்துதவினுர். அடியவர்கள் எதைக் கேட்டாலும் இல்லையென்று சொல்வதில்லையென்று உறுதியோடு மனைவியையும் கொடுத்து மகிழ்ந்தார் ஒரு முனிவர். அடியவர்க்குத் தீங்கு செய்வோரைத் தண்டிப்பதே தம் சிவ பக்திக்கு அடையாளமாகக் கொண்டிருந்தார் ஒரு வீரர். ஏகாலியர் ஒருவர் அடியவர்க்கெல்லாம் ஆடை ஒலித்துக் கொடுப்பதே தொண்டாகச் செய்து வந்தார். இவ்வாறு அடியவர்க்கமுதளித்தல், பூவெடுத்துத் தொடுத்து ஆண்டவனுக்குச் சாத்தி மகிழ்தல், ஆலயங்களில் திருவிளக்கிடுதல் முதலாகப் பல்வேறு தொண்டு நெறிகள் பெரிய புராணத்தால் விளக்கம் பெறுகின்றன. இந்தச் செயல்களைப்பார்த்தால் சாமானியமாக யாரும் செய்யக்கூடிய செயல்தானே என்று தோன்றும். ஆனல் இவற்றைச்செய்ய முடியாமல் முட்டுப்பாடு நேர்கின்றபோதும், இடுக்கண் விளைகின்றபோதும் தங்கள் உடல் பொருள் ஆவி மனைவி மக்கள் முதலிய அனைத்தையும் அர்ப்பணித்துக் கொள்கையை நிறைவேற்றி வெற்றி கண்ட வீரச் செல்வர்கள் அவர்கள். நம்மனோர் சிறு துன்பம் நேரிட்டாலும் கடவுளை மறக்கவோ அல்லது கடவுளைச் சபிக்கவோ

துணிகின்றோம். இனி அத்தொண்டர்களின் உறுதி நிலையைக் காட்டும் சில வரலாறுகளைச் சிந்திப்போம்.

கலய நாயனார் என்ற பெரியவர் நாள்தோறும் சிவாலயத்தில் குங்கிலியத் தூபம் எடுத்து மகிழ்ந்து வந்தார். நாளடைவில் அவர் குடும்பம் வறுமையால் பீடிக்கப்பட்டது. மனைவி மக்கள் சுற்றமெல்லாம் பசியால் வாடிவந்தார்கள். அந்நிலையைக்கண்டு சகிக்க முடியாத அவர் மனைவியார் தன் கழுத்திலணிந்திருந்த பொன் தாலியைக் கொடுத்து நெல் வாங்கி வரும்படி சொன்னார். கலியரும் தாலியை எடுத்துக்கொண்டு சென்றார். எதிரே குங்கிலியப் பொதியோடு ஒரு வண்டி வருவதைப் பார்த்தார். ஆண்டவனுக்கேற்ற குங்கிலியப் பெரும் பொதியாக இருப்பதைக்கண்டு அளவில்லாத ஆனந்தம் கொண்டார். உடனே தாலியைக்கொடுத்து அக் குங்கிலியப் பொதி முழுவதையும் வாங்கிக்கொண்டு போய்ச் சிவபெருமான் திருக்கோயிலில் சேர்ப்பித்து விட்டு ஆண்டவனை வணங்கி நின்றார். பாருங்கள் அன்பர்களே! மனைவியும் மக்களும் சுற்றமும் தானும் பசியால் வருந்தித் துடித்தும் குங்கிலியத்தைக் கண்ட போது அனைத்தையும் மறந்துவிட்டாரே கலயர்! இது வல்லவா உண்மையான பக்தி நிலைக்கு அடையாளம். இவ்வாறு நம்மில் துறவிகள்கூட செய்யத் துணிவ தில்லையே. இவ்வளவு பேரன்புடையதொண்டரை ஆண்ட வன் கைவிடுவானோ? அவருடைய இல்லத்தில் செம் பொன்னும் நவமணியும் செந்நெல்லும் முதலியவற்றை மழைபோலப் பொழிந்து நிறைவித்து மகிழ்ந்தான் ஆண்டவனும்.

அமர்நீதியார் என்பவர் வணிகர். புதிதாக நெய்து வைத்திருந்த கோவணத்தை அடியவர்க்கெல்லாம் கொடுத்து மகிழ்ந்தார் அவர். ஒருநாள் ஒரு புதிய தொண்டர் வந்து தன் கைவசம் இருந்த கோவணம்

ஒன்றைக் கொடுத்துப் பாதுகாத்து வைக்கும் படி சொல்லிவிட்டு நீராடக் காவிரிக்குச் சென்ருர். நீராடித் திரும்பியபோது பெருமழை பொழியவே உடம் பெல்லாம் நனைந்து வந்தார். அத்தொண்டர் வந்தவர் அமர்நீதியாரைப் பார்த்துத் தான் கொடுத்த கோவ ணத்தை எடுத்துவரச் சொன்னுர். உடனே சென்று பார்த்தால் கோவணம் எங்கோ மாயமாய் மறைந்து விட்டது. திகைப்போடு வந்து வணங்கி உள்ளதைச் சொன்னுர் அமர்நீதியார். வந்தவர் மிகவும் கோபித்துக் கொண்டு தன் கைத்தண்டில் கட்டியிருந்த மூன்ருவது கோவணத்தைக் கொடுத்து அதன் எடைக்குச் சமமாகக் கோவணம் கொடுக்கும்படி கட்டளையிட்டார். அமர்நீதி யாரும் மகிழ்வோடு இசைந்து ஒரு பெரிய துலாக் கோல் கொண்டுவந்து நிறுத்தி, வந்தவர் கொடுத்த கோவணத்தை ஒரு தட்டிலிட்டுத் தன் வசமிருந்த கோவணங்களையெல்லாம் மற்ரெரு தட்டிலிட்டும் எடை சரியாகவில்லை. பின்னர் தன்னிடமிருந்த பட்டுந்துகி லும் எல்லாம் கொண்டுவந்து குவித்தார் அப்போதும் எடை சரியாகவில்லை. மறுபடியும் பொன்னும் மணியும் முதலிய ஆபரணங்களையெல்லாம் இட்டும் ஒரே கோவணம் உள்ள அந்தத் தட்டு தாழ்வதும் மற்ற இவ்வளவும் குவித்திருக்கும் தட்டு உயர்வதுமாக இருந் தது. இது என்ன மாயக் கோவணமாக இருக்கிறதே என்று மனங்கலங்கிய அமர்நீதியார் முடிவில் தானுந் தன் மனைவியும் மகவும் மூவரும் அத்தட்டில் ஏறத் துணிந்தார். துணிந்து

இழைத்த அன்பினில்
இறைதிருநீற்று மெய்யடிமை
பிழைத்தி லோமெனில்
பெருந்துலை நேர்நிற்க என்றே
மழைத்த டம்பொழில்
திருநல்லூ ரிறைவரை வணங்கித்
தழைத்த அஞ்செழுத் தோதினுர்
ஏறினுர் தட்டில்.

அப்படி ஒரு கோவணத்திற்காக அனைதையும் ஈடு கொடுத்துத் தாங்களும் ஈடாகத் தராசுத் தட்டில் ஏறி நிற்கவே அடியவர் தொண்டும் ஆண்டவன் அருளும் சமமாகித் துலாக்கோல் நேர் நின்றது. வந்த தொண்டர் திடீரென்று மறைந்தார். அம்பிகையோடு இடபவாகன ராய் இறைவனுகக் காட்சியும் கொடுத்தார். உடனே அந்தத் தராசுத் தட்டு விமானமாக மாறியது. அமர் நீதியார் குடும்பத்துடன் கயிலைமாமலை சென்ருர். அங்கே குபேரனும் ஏவல் கேட்கும்படி பெருஞ் செல்வராய்ப் பேரின்பக் கடலில் மூழ்கி வாழ்ந்தார். ஒரு கோவணத் தைக் கெட்டுப் போக்கியதற்காக இப்படிப்பட்ட தியா கம் செய்ய நாமெல்லாம் துணிவோமா. பாரம் ஈசன் பணியல தொன்றிலார் —வீரம் என்னுல் விளம்புந் தகையதோ எனச் சேக்கிழார் பெருமானே கூறுவா ராளுல் அவர்கள் பெருமையை என்னென்பது.

## மூவர் முதலிகள்.

பெரிய புராணத் தொண்டர்களில் திருஞான சம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசு நாயஞரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் மூவர் முதலிகள் எனச் சைவ சமயத்தாரால் சிறப்பாகப் போற்றி வணங்கப் பெறுகின்றனர் அவர்களைப்போன்ற அருட்சக்தி வாய்ந்த சமயத் தலைவர்கள் இதுவரை வேறெங்கும் தோன்றவில்லை என்பது துணிபு. தெய்வத்தைப் பற்றிப் பேசாமலே உலக நீதிகளை மட்டும் போதித்த சமயத் தலைவர்களும் தெய்வத்தைக் காணுமல் நம்பிக்கை மாத்திரமாய்ப் போதித்தவர்களும் என இரண்டுவகையான சமயத் தலைவர்கள் உலகத்தாரால் போற்றப் பெறுகின்றனர். மகாவீரர், கௌதமபுத்தர் எல்லாம் கடவுள் கொள்கையில்லாமலே சமயம் சாதித் தார்கள். மகமதுநபி, ஏசுநாதர் முதலியோர் நம்பிக்கை மாத்திரமாய்க் கடவுளைப்பற்றிப் பேசினுர்கள். ஆனுல் மேலே சொல்லிய மூவர் முதலிகளும் கடவுளை நேரில்

கண்டார்கள். பிறருக்கும் காட்டினார்கள். வழிவழியே நம்மனோர் காணவும் வழிவகுத்தார்கள். திருவருளை உணராது உலகத்தையே நோக்கி எவ்வளவு கடுமையான சீர்திருத்தம் செய்தாலும் அவை நீடித்து நில்லா என்பதே நமது பெரியோர்கள் கொள்கை. கடவுளுக்கும் உலக நிகழ்ச்சிகட்கும், கடவுளுக்கும், ஆன்மாக்களுக்கும் எவ்வித சம்பந்தமும் முத்தியிலும் கூட இல்லை என்பது ஜைனர்கள் கருத்து. கடவுள் உண்டா இல்லையா என்று வினவியபோது கௌதம புத்தர் ஒன்றும் சொல்லாமல் மௌனம் சாதித்து மறைந்தார். ஆனால் அவரது சீடர்கள் கடவுள் இல்லையெனச் சாதித்துப் புத்தமதக் கொள்கையாக்கினர். கடவுளைக் காணவில்லையாதலால் ஒருசிலர் கடவுளுக்கு உருவமில்லை என்றும் உருவத்தை வணங்குபவன் அஞ்ஞானி என்றும் கருதினார்கள். இதிலிருந்து அவர்கள் கடவுளை ஒப்புக்கொண்டார்கள் அல்லது நம்பினார்களே தவிர கடவுளைக் காணவில்லை என்பது தெளிவாகின்றது. இவற்றோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது நமது நாட்டுப் பெரியோர்கள் மிகப் பழங்காலத்திலேயே கடவுளைக் காணமுடியும் என்பதை உணர்ந்திருந்தனர் என்பது தெளிவாகும்.

இந்து மதமாகிய பெரிய மரத்தின் கிளைகளே வெவ்வேறு மதமாக உலகமெங்கும் பரவின என்பது பேரறிஞர்கள் கருத்தாகும். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி நாயனார் என்ற மூவர் முதலிகளும் திருவருள் வல்லமையால் யாரும் நினைக்கவும் முடியாத பல அற்புதங்களைச்செய்து கடவுள் உண்மையை உலகத்தார்க்குத் தெளிவுபடுத்தினார்கள். இத்தகைய சைவ சமயப் பேருண்மைகள் உலகமெங்கும் பரவி வேர்கொள்ளுமாயின் விஞ்ஞானத்தில் உள்ள மோகம் தணிந்து உலகம் மெய்ஞ்ஞானத்தை நாடும் என்பது உறுதி.

## பெரியபுராணத் திறவு-உடைமையும் அடிமையும்.

சைவ சித்தாந்த முடிபுகளே பெரியபுராணத்து நிகழ்ச்சிகட்குத் திறவாக இருப்பன. அவற்றைத் தெளிவாக உணர்ந்தாலல்லது திருத்தொண்டர்கள் செய்த அருஞ் செயல்களின் நியாயத்தையும், பெருமையையும் நாம் உள்ளவாறு உணரமுடியாது. ஆதலால் அவற்றுள் சிலவற்றையாவது இங்குச் சிந்திப்போமாக. உலகமெல்லாம் இறைவனுக்கு உடைமை. உயிர்களெல்லாம் இறைவனுக்கு அடிமை என்ற முடிபு ஒன்று. மற்ருென்று அங்கிங்கெனுதபடி எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் சிவனடியாரிடத்தும் திருக்கோயிலுள்ளிருக்கும் சிவலிங்கத் திருமேனியிடத்தும் விளங்கித் தோன்றி நமக்கருள்புரிவான் என்பது. ஆன்மாக்கள் தன்னை நினைத்து மகிழ்வதற்காகச் சிவபெருமான் தனது சிறப்புச் சின்னங்களாகிய திருநீறு கண்டிகையைத் தனது அன்பர்களும் அணிந்து கொள்ளுமாறு அமைத்தார். ஆதலால் அடியார்களைக் காணும்போது சாமானிய அன்பர்கட்குச் சிவபெருமான் நினைவு வருகின்றது. ஆனல் மெய்யன்பர்கட்கோவெனின் அடியார்களைக் காணும்போது ஆண்டவனே என்ற உணர்வு நிலைக்குச் சென்றுவிடுகிருர்கள். இம்முடிபுகளை நம்மனேர் ஒப்புக் கொள்கின்ருேம் அல்லது நம்புகின்ருேமே தவிர அனுபவத்தில் உணரவில்லை. ஆனல் திருத்தொண்டர்கள் அனைவரும் மெய்யுணர்வு பெற்றவர்களாதலால் இவற்றை அனுபவத்தில் உணர்ந்திருந்தார்கள். காளத்தி மலைமீதமர்ந்த குடுமித்தேவர் திருவுருவத்தில் கடவுளைக் கண்டார் கண்ணப்பர். அமர்நீதியார், இயற்பகையார், சிறுத்தொண்டர் முதலியோர் அடியார்களை ஆண்டவனுகவே எண்ணிப் பெருந்தியாகம் செய்தார்கள். இவையெல்லாம் உண்மை யனுபவ நிலையில் நிகழ்த்தப் பெற்றன. இறைவனே இல்லை என்பவர்கள் இவற்றைக் குறை கூறுவது நியாயமாகும். ஆனல் இறைவனை நம்புகின்றவர்கள் இறைவன் திருவடியை அடைவதே

ஆன்மலட்சியம் என ஒப்புக் கொள்கின்றவர்கள் திருத் தொண்டர் செயல்களைப் போற்றி மகிழ்வர் என்பது உறுதி.

## மெல்வினை வல்வினை

இனி மெல்வினை, வல்வினை என்ற சைவ சித்தாந்த முடிபினைச் சிறிது சிந்திப்போம். திருவருளைப் பெறுவதற் காகச் செய்யும் முயற்சிகள் எல்லோரும் பின்பற்றக் கூடிய எளிமையுடையனவும், பல்லாயிரவரில் ஒருவர் கூடப் பின்பற்ற முடியாத அருமையுடையனவும் என இருவகைப்படும். இவற்றை முறையே மெல்வினை வல் வினை எனப்பிரித்துத் திருக்களிற்றுப்படியார் என்ற அருள் நூல் தெளிவுபடுத்துகின்றது.

மெல்வினையே யென்ன வியனுலகில் ஆற்றரிய
வல்வினையே என்ன வருமிரண்டும்--சொல்லிற்
சிவதன்மம் ஆமவற்றிற் சென்றதிலே செல்வார்
பவகன்மம் நீங்கும் படி.

ஆதியை அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே
தீதில் திறம்பலவும் செய்வனவும்—வேதியனே
நல்வினையா மென்றே நமக்குமெளி தானவற்றை
மெல்வினையே யென்றது நான் வேறு.

வரங்கள் தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினு லன்றுகறி யாக்க—இரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினையே யான [தனை
வல்வினையே என்றதுநான் மற்று.

இவ்வெண்பாக்களும் இன்னும் பலவும் மெல்வினை வல்வினை பற்றித் தெளிவுபடுத்துகின்றன. மகவை யறுத்துக் கறி சமைத்தலும், மனைவியைத் கொடுத்து

மகிழ்தலும், கண்ணிரண்டையும் பறித்து அப்புதலும் போன்ற செயல்கள் வல்வினை யெனப்படும். நம்போன்ற சாமானியர்கள் இவ்வளவு கடுமையான செயல்களைச் செய்யமுடியாது. ஆதலால் நம் நிலைக்கேற்ப எளிய முறையில் செய்யக்கூடிய சரியை கிரியை யோகம் என்ற படிமுறையான காரியங்களே மெல்வினை யெனப்பெறும். இவ்விருவகையும் பெரிய புராணத்தில் விளக்கமாக அறி விக்கப் பெறுகின்றன.

## வினை பற்றிய தீர்ப்பு

உழவுத் தொழிலை ஏற்றுக்கொண்டு அதன் பயனை நமக்குத்தரும் விளை நிலம்போல நாம் செய்யும் வினையை ஏற்றுக்கொண்டு அவற்றைப் புண்ணியமா பாவமா எனப் பரிசீலித்து அவற்றின் பயனை நமக்குச் சேர்ப்பது ஆண்ட வன் அருட் சத்தி என்பதும் சித்தாந்த முடிபுகளுள் ஒன்று. அதற்குக் காரணமும் நியாயமும் சிவஞான போதம் முதலிய நூல்களுள் விரிவாக விளக்கப் பெறு கின்றன.

அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறமதாகும்
பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி
நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மையாய்த்தே.

என்பது சிவஞான சித்தியார்.



# † தவ நெறி

## தவம் அவசியம்

ஆன்ம வாழ்வினை இம்மை மறுமை வீடு என மூன்ருகப் பகுத்துஉள்ளனர் சமய நூலோர். இம்மை என்பது நாம் வாழும் இவ்வுலக வாழ்வு. மறுமை என்பது தேவருலக வாழ்வு. வீடு என்பது இவ்விரண்டினும் சிறந்ததான பேரின்ப வாழ்வு. இப் பேரின்ப வாழ்வினைப் பெறுவதற்குச் செய்யும் முயற்சியே தவம் எனப் படுவது. ஆன்மவாழ்வு இவ்வுலகத்தோடு முடிந்து விடுவதில்லை. இவ்வுலகில் தானெடுத்த உடம்பினை விட்டுப்பிரிந்த ஆன்மா வேறு உடம்பிலோ, வேறு உலகத்திலோ தோன்றியே தீரவேண்டும். இதனை நாத்திகர் தவிர மற்ற சமயவாதிகள் அனைவரும் ஒத்துக் கொள்கின்றனர். எனவே, இவ்வுலக வாழ்வினுக்காகப் பாடுபடுதல் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் மேலுலக வாழ்வினுக்காகப் பாடுபடுதலும் எனச் சமய நூல்கள் கூறுகின்றன. பொது நெறியில் நின்று உலக அறங்கள் அனைத்தையும் தொகுத்துக் கூறியவர் திருவள்ளுவர் என்பதை நாமறிவோம்.

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னென்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று"

என வேத வேள்வியைக் கண்டிக்கிற திருவள்ளுவருங் கூடத்

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றெல்லாம்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு"

எனத் தவஞ்செய்தலின் அவசியத்தை எடுத்துக் காட்டுகிருர். பழந்தமிழர் வாழ்க்கையமைப்பினை நன்கு எடுத்துக் கூறுவது தொல்காப்பியப் பொருளதிகாரம்.

---

† வானொலிப் பேச்சு-வானொலி நிலைய இசைவுபெற்று வெளியிடப்பட்டது.

மனையறங்காத்த நல்லோரெல்லாம் நாளடைவில் உலக இன்பத்தில் ஆசை தீர்ந்து சுற்றமும் மக்களும் சூழ இருந்தே தவம் பயலுதல் வேண்டும் என அந்நூலும் விதிக்கின்றது.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்பது தொல்காப்பியச் சூத்திரம். இங்கே 'சிறந்தது' என்பதற்கு "அறம்பொரு ளின்பங்களிற் சிறந்ததான வீட்டின்பம்" என நச்சினார்க்கினியர் உரை கண்டுள்ளார்.

இனி வேந்தர்களாக வீற்றிருந்து நாடாள்வோரும் வீரவுணர்ச்சி குன்றிச் சாந்தவுணர்ச்சிமேலிடும் பருவத்தில் தங்கள் மைந்தர்களுக்கு மணிமுடி சூட்டித் தாங்களெல்லாம் தவமே பயிலவேண்டும் என அறநூல்கள் விதிக்கின்றன அந்நெறியினைப் பின்பற்றியே தசரதன் இராமனுக்கு முடிசூட்டுவது பற்றி மந்திராலோசனை செய்யும்போது,

"கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழல்
நிச்சய மன்றெனி னெடிதுநா ளுண்ட
எச்சிலை நுகருவ தின்ப மாகுமோ"

எனவும்,

"ஆதலா லிராமனுக் கரசை நல்கியிப்
பேதமைத் தாய்வரும் பிறப்பை நீக்குவான்
மாதவந் தொடங்கிய வனத்தை நண்ணுவேற்(கு)
யாதுநுங் கருத்து"

எனவும் கூறுகின்றான். மனையறத்தில் நின்றோரும் மன்னர் மன்னர்களுங்கூடத் தவம் செய்தல் வேண்டும் என்றால் துறவறத்தில் நிற்போரைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? தவநெறியை வேண்டாதார் துறவறத்தினை மேற்கொள்வது எதற்காக? திருவள்ளுவர் துறவற இயலில் தவம் என்ற அதிகாரத்தை அமைத்திருப்பதே இதனை வலியுறுத்தும். உலகம் நடைபெறுவதற்காக யார் என்ன துறையில் நின்றாலும் எல்லோரும் முடிவில் தவஞ்செய்தலையே குறிக்கோளாகக் கொள்ளவேண்டும் என்பதை இதுவரை ஒருவாறு சிந்தித்தோம்.

## தவத்தின் பெருமை

இனி தவத்தின் பெருமைதான் என்ன என்று பார்ப்போம். விசுவாமித்திரர் முனிவராதற்கு முன்னர் மன்னவராக இருந்தவர். ஒரு சமயம் வசிட்ட முனிவரோடு மாறுபட்டுத் தோல்வியுற்றார். தனது பேராண்மையும் படை வல்லமையும் அனைத்தும் இம்முனிவர் தவ வல்லமையின் முன் சிதறிப்போயினவே என்ற தனது கூர்த்த மதியால் சிந்தித்துப் பார்த்த அவர் அப்போதே அரச பாரத்தை உதறித்தள்ளித் தவநெறியை மேற்கொண்டார் என அறிகின்றோம். இலங்கைமாநகரத்தைச் சுற்றிப்பார்த்த அனுமான் அந்நகரத்தின் பெருமை எல்லாம் இராவணன் இயற்றிய தவத்தின் பெருமையல்லவா என வியந்து சிந்திக்கின்றான். அச் சிந்தனையைக் கவிஞர் வேந்தனாகிய கம்பன்.

"ஈட்டுவார் தவமலால்மற்
றீட்டினு லியைவதின்மை
காட்டினார் விதியாரஃது
காண்கிற்பார்க் காண்மினம்மா!
பூட்டுவார் முலைபொருது
பொய்யிடை நையப்பூநீர்
ஆட்டுவார் அமரர்மாத ராடுவா
ரரக்கர் மாதர்"

எனவும்,

''மரம டங்கலும் கற்பக மனேயெலாங் கனகம்
அரம டந்தையர் சிலதிய ரரக்கியர்க் கமரர்
உரம டங்கிவந் துழையவ யுழல்பவ ரொருவர்
தரம டங்குவ தன்றிது தவம்செய்த தவமால்''

எனவும் அழகுபடக் கூறுகின்ருன்.

''ஆழியான் வேதன் அமரர்க்கிறை முதலோர் வாழி யால் என்று வழுத்திட வைக்கும்'' பேராற்றலேக் கடுந் தவத்தாற் பெற்றிருந்தான் சூரபத்மன் எனக் கந்த புராணம் கூறுகின்றது. எனினும், புராணங்களுட் கூறப்படும் இவையெல்லாம் தவத்தின் பெருமையை ஒருவாறு உணர்த்திஞலும் இவை தவத்தின் மெய்ப்பய ஞகா. மூர்க்கத்தனமாகக் கடுந்தவஞ் செய்த அசுரர் களும், மென்மையாக வேள்விகளேச்செய்த அமரர்களும் இருசாராரும் பதவி வேட்டைக்காரர்களே. கடவுளேக் காணும் பேறு பெற்றும் அவர்களெல்லாம் ஞான மோக்ஷத்தை விரும்பாமல் பதவி போகங்களேயே விரும் பிப் பெற்ருர்கள். உயர்ந்த பதவியும் பெரு வல்லமை யும் சேர்ந்தால் அவை அவர்களேச் சும்மா இருக்க விடுமா? முடிவில் தேவர்களும் அசுரர்களும் அடுத்தடுத் துப் போரிட்டுக்கொண்டு அவதியுற்ருர்கள் என்பதைப் புராணங்கள் சித்தரிக்கின்றன. பதவிநிலே எதுவாயினும் அவையெல்லாம் அழிந்துபடும் என்பதும் பதவி உயர உயரத் துன்பமும் அவதியுமே அதிகரிக்கும் என்பதும் புராணங்களால் நாம் அறிந்துகொள்ள வேண்டிய உண்மைகளாகும். சூரபத்மனுல் சிறையிலடைக்கப்பட்ட இந்திர குமாரன்.

''வென்றி யரக்கரால் மேதகைய தானவரால்
அன்றி யவுணரா லண்டரா லேனேயரால்
ஒன்று செயஒன்ரு யுறுதுயரத் தாழ்ந்ததன்றி
என்று மகிழ்வா யிடரற் றிருந்தனமே''

என்று புலம்புவதே இதற்குச் சான்ருகும். எனவே பேரின்பத்தையும் அமைதியையும் தருவதே தவத்தின் பெருமையென நாம் உணரவேண்டும்.

## தவம் என்பது எது?

எது தவம் என்று வரையறை செய்து கூறுவது எளிதான காரியமல்ல. பல்வேறு சமய நெறியினர் தங்கள் தங்கள் அனுபவத்திற்கேற்பத் தவநெறிகளையும் பல்வேறு வகைகளாகக் கூறியுள்ளார்கள். தெய்வக் கொள்கையில்லாத ஜைன பௌத்தர்களுங்கூட தவம் சீலம் இவற்றை வற்புறுத்துகின்றனர். பௌத்தர்கள் அகிம்சையே தவம் என்கின்றனர். ஜைனர்கள் தலை மயிர் பறித்தல், சுடுபாறையிற் கிடத்தல், ஐம்பொறியடக்கல் இவற்றைத் தவம் என்கின்றனர். உலக மக்கள் துன்பத்தினைத் துடைக்கும் வழியினைக் கண்டறிவதற்காகக் கௌதம புத்தர் அரசபாரத்தையும் உதறித்தள்ளிப் போதிமரத்தின் நிழலில் ஐந்தாண்டுகள் ஊண் உறக்கமின்றித் தவம் இருந்தார் என அவர் வரலாறு கூறுகின்றது. ஏசுநாதர் வரலாற்றிலுங்கூடப் பன்னிரண்டாண்டுகள் வரை அவர் எங்கிருந்தார் என்ன செய்தார், என்பதை இதுவரை யாருமறிந்திலர். அக்காலத்தில் அவர் மன்பதைக்கு நல்வழி காட்டும் தகுதியினைப்பெற முயன்றிருக்கலாம் என்று எண்ணுவது பொருத்தமல்லவா? எப்படிப் பார்த்தாலும் சமயநெறியை அறிவுறுத்திய பெரியோரெல்லாம் உலக ஆரவாரத்தை விட்டுத் தனியிடத்தே யிருந்துதான் பல பேருண்மைகளைக் கண்டறிந்தார்கள் என்பது யாரும் மறுக்க முடியாத தொன்று. ஏன்? விஞ்ஞானிகளுங்கூட உலக நினைவையே மறந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கித்தான் பல புதுமைகளைக் கண்டுபிடிக்கிருர்கள். பழய விஞ்ஞானியான "சர் ஐசக் நியூடன்" வரலாறே இதற்குச்சான்று. ஆகவே வெளியுலகில் தாவியலையும் மனக்குரங்கை அகமுகமாகத் திருப்பி ஓரிடத்தில் திறுத்தி ஆழ்ந்த

சிந்தனையில் மூழ்கிப் பசி, களைப்பு, உறக்கம் முதலிய உணர்வின்றியிருப்பதே தவமெனப் பொதுவகையில் உணரலாம்.

திருவள்ளுவர் கருத்துப்படி தவம் எது என்பதைச் சிந்திப்பது இங்கே பொருத்தமாகும். தெய்வம் ஒன்று உண்டு என்பதோடு தெய்வ வழிபாடும் இன்றியமையாதது என்பதைக் கடவுள் வாழ்த்தில் ஆணியறைந்தது போல வற்புறுத்துகின்ருர் திருவள்ளுவர்.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்பது திருக்குறள். இறைவனைப் பற்றுக என்று ஆணை தந்த திருவள்ளுவர் அதனேடு நில்லாமல் உலகப் பற்று அறுவதற்காக இறைவனைப் பற்றுக என அதன் நோக்கத்தையும் தெளிவுபடுத்துகிருர். எனவே உலகப் பற்று அறுதலும், தெய்வத்தை அடைதலுமே ஆன்ம லக்ஷியம் என்பது திருவள்ளுவர் கருத்தாதல் தெளியப்படும். தெளியவே, தவஞ் செய்தலின் நோக்கமும் இதுவேயென நாம் உணரலாம்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு"

என்ற திருக்குறள் தவஞ்செய்வார் பின்பற்றவேண்டிய நெறியினைக் குறிப்பதாகும். அதாவது தவநெறியில் நிற்பார் தமக்கு வருந் துன்பத்தைப் பொறுத்துக்கொள்வதோடு பிற உயிர்க்குத் தீங்கு செய்யாமையும் வேண்டும் என்பதாம். இவை தவத்தின் வடிவம் எனவே தவத்தின் நோக்கமோ தவத்தின் பயனே வேறு என்பது சொல்லாமலே விளங்கும். தெய்வத்தை அடைவதுதான் தவத்தின் நோக்கம் என்பதை மேலே சொல்லியுள்ளோம். பகைவரை அழித்தலும், நண்பரை ஆக்கலும், கூற்றம் குதித்தலும் வேண்டியவற்றையெல்லாம்

அடைதலும் தவத்திஞல் கைகூடும் என்கிருர் திரு வள்ளுவர். இவையெல்லாம் தெய்வத்திருவருளின்றி நிறைவேறுமா? சிந்தித்துப் பாருங்கள். அன்பர்களே. ஆகவே திருவள்ளுவர் கருத்துப்படி தவம் என்பது கடவுளை அடைவதற்காகச் செய்யும் முயற்சியே என்பது புலனுகின்றது. சிவபெருமான் தடுத்தாட்கொண்ட பின்னர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்துறையூர்ப் பெருமானை வணங்கித் "தலைவா! நின்னை வேண்டிக் கொள்வேன் தவநெறியே" என அவ்வூர்ப் பதிகத்துப் பத்துப் பாடலிலும் வேண்டுகின்ருர். யோக நெறியில் நின்று இறைவனை வழிபட்டவர் சுந்தரர் என்பது சைவசமயச் சான்ருேர்கள் கருத்து. எனவே அவர் வேண்டிக்கொண்ட தவநெறி யோக நெறிதான் என் பது புலனுகும். பொதுவாகச் சொல்லுமிடத்துத் தவம் என்பதும் யோகம் என்பதும் ஒன்றே எனக்கருத இட முண்டு. ஆதலால் இங்கே யோக நெறியைப்பற்றிச் சிறிது விரிவாகச் சிந்திப்பது பொருத்தமாகும். 'யோகம்' என்ருல் 'ஒன்றுதல்' என்பது பொருள். ஆன்ம அறிவு தெய்வப் பேரறிவோடு ஒன்றுதலே யோகம் எனச் சமய நூல்கள் கூறுகின்றன. அஃது எவ்வாறென்று பார்ப்போம். உடம்பினுள் கட்டுண்டு உலவும் ஆன்மாவி னுக்குச் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியா தீதம் என ஐந்து வகையான நிலை வேறுபாடுகள் உண்டு. இவற்றுள் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி மூன்றையும் நாம் அனைவரும் அனுபவித்து வருகி ருேம். மற்ற துரியம், துரியாதீதம் இரண்டும் யோக நெறி கைவந்த ஞானிகள்தான் அனுபவித்துக் காண முடியும். துரிய நிலையில் இருக்கும்போது ஆன்மாவும் பிராணனும் இருக்கும், துரியாதீத நிலையிலோ ஆன்மா வும் திருவருளுமே இருக்கும். இந்த அதீத நிலையில் தான் ஆன்ம, அறிவு தெய்வப் பேரறிவோடு ஒன்று பட்டு மெய்ப்பொருள் காட்சியினைப் பெறுகின்றது.

இதனையே இன்னும் சிறிது விளங்கக் காணுதல் நல்லது. உலக அமைப்பில் உள்ள அடிப்படைக் கூறுகள்

அனைத்தும் ஒவ்வொரு மனித உடம்பிலும் அமைந்துள்ளன. ஆதலால் நமது நாட்டுப் பண்டைய ஞானச் செல்வர்கட்கு அவர்கள் உடம்பே ஆராய்ச்சிக்கூடமாக இருந்தது. திருவருளே வழிகாட்டி. மனமே கருவி. இவ்வாறு உண்மை ஞானத்தைப் பெற்று நமது முன்னோர்கள் உலக முழுவதையும் அளந்து அறிந்தனர். அதுமட்டுமா? விஞ்ஞானிகள்கூட இன்னும் இன்னதெனச் சிந்தித்தறியாத உயிரையும் இறைவனையுங் கூடத் தங்கள் அனுபவத்தில் கண்டனர் என்றால் அந்த யோகத்தின் வல்லமையைத்தான் என்னென்பது! தங்களுக்கு அநியாயமான புற உலகைக் குடைந்து குடைந்து பல புதுமைகளைக் கண்டுபிடிக்கிறார்கள் விஞ்ஞானிகள். என்ன கண்டுபிடித்தும் என்ன பயன்? அணுகுண்டைக் கண்டுபிடித்த மகா மேதையான விஞ்ஞானியுங்கூட மற்ற சாமானியர்களைப்போலவே பசி, களைப்பு, உறக்கம், நரை, திரை, மூப்பு இவற்றிற் காளாகித் தான் யார் என்றும், இந்த உடம்புக்குள் ஏன் புகுந்தோம் என்றும் அறியாதவராகி எங்கே போகின்றோம் என்றும் தெரியாமல் எங்கோ போய்விட்டார். அவரால் கண்டுபிடிக்கப்பட்ட அணுகுண்டுங்கூட குரங்கின்கைக் கொள்ளிபோல உலகப் பொதுமக்களை அச்சுறுத்துகின்றது. சுருங்கச்சொல்லுமிடத்து, விஞ்ஞானக் கடலில் மூழ்கி மூழ்கி மூச்சுத் திணறும் நிலையிலுள்ளது இன்றைய மனித வர்க்கம். இதற்கெல்லாம் காரணம் என்ன? ஆத்மீக வுணர்வும் புலனடக்கமும் இல்லாமல் உண்மை ஞானம் என்பதும் அடியோடு வற்றிப் போனதே என்று சொல்லவும் வேண்டுமா! தவநெறியில் நின்று, புலனடக்கமும் ஆத்மீக வுணர்வும் பெறுமல் விஞ்ஞானத்தைமட்டும் நம்புவதால் மனிதவர்க்கம் நசிக்குமே ஒழிய செழுமையுறாது. ஆதலால், மெய்ஞ்ஞானமும் வேண்டுமென்பதை விஞ்ஞானிகளும் உணரும் நன்னாளை நாமெல்லாம் எதிர்பார்ப்போமாக. தவநெறி, யோகநெறி என்பன ஒன்றே என்பதையும் இதுவரை ஒருவாறு சிந்தித்தோம்.

## சிவஞானபோதமும் தவமும்

சைவ சித்தாந்த முதல் நூலாகிய சிவஞானபோதம் எட்டாவது சூத்திரத்தில், முன் செய்த தவப்பயனுக இறைவனே ஆன்மாக்களுக்குக் குருவாக வந்து உண்மை ஞானத்தைக் கொடுப்பான் என்று கூறுகின்றது. அங்கே, சரியை, கிரியை, யோகங்களே தவம் எனவும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. சிவாலயத்திற்கும் சிவனடியார்கட்கும் தொண்டுசெய்து வழிபடுதலே சரியையெனப் பொதுவகையாற் கூறலாம்.

"சங்கரன்றன் கோயில் தலம் அலகிட்டு திருமெழுக்கும் சாத்தி-போதுகளும் கொய்து பூந்தார் மாலைகண்ணி புனிதற்குப் பல சமைத்து—தீதில் திருவிளக்கிட்டு—திருநந்தவனமும் செய்து -திருவேடம் கண்டால் அடியேன் செய்வது யாது பணியீரென்று பணிந்து—அவர் தம் பணியும் இயற்றுவது" என இச் சரியைநெறி சிவஞான சித்தியாரில் விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளது. இவ்வாறு தொண்டு செய்தால் மனமாசு அகன்று தூய வாழ்வு மலரும். அவ்வாறு மனமாசு அகன்றவர்கள் ஏதாவதொரு திருவுருவத்தின்மூலம் இறைவனைத் தாங்களே பூசித்தல் கிரியைத் தவமாகும். அபிடேகம் ஆராதனை அர்ச்சனை :நைவேத்தியம் முதலிய பல அங்கங்களோடு புறத்தே வழிபாடு செய்து இகத்தேயும் நெஞ்சத்தாமரையில் அப்பெருமானைப் பாவித்து நிறுத்தி முறையாகப் பூசித்தலே சிவபூசையெனப் பெறுவது. மாயையின் வசப்பட்டு கருவி கரணங்களிற் ரேய்ந்து மயங்கும் ஆன்மா இறைவன் திருவருள் வெளியை எட்டிப் பார்ப்பதற்கு இவ்வாறு பூசிப்பதே சிறந்த சாதனமாகும். யோகநெறியைப்பற்றி மேலே கூறப்பெற்றுள்ளது, ஆசனம், பிராணுயாமம், தியானம் என்ற மூன்று அகங்களாலாகியது யோகநெறி. வெறும் ஆசனப் பயிற்சி மட்டும் செய்வது யோகமாகாது. அவ்வாறு ஆசனமட்டும் பயில்வது வித்திடாமல் செய்யும்

உழவுத் தொழிலைப்போன்றது தியானத்தில் நிலைத் திருந்து சமாதி கூடுவதற்கு மன உரமும் உடலுறுதி யும் வேண்டும். ஆசனமும் பிராணயாமமும் முறையே உடலுறுதியையும் 'மன உரனையும் தரும். பின்னர் தியானம் சமாதியைக் கூட்டும், இவை மூன்றும் சேர்ந்ததே யோகம் எனப்பெறும். இங்கே சொல்லிய சரியை, கிரியை, யோகம் என்ற மூன்றும் ஞானத்தை விளைவிக்கும் சாதனங்கள் என்றும் இவையின்றி ஒரு வர்க்கும் கற்பனையினுல் ஞானம் விளையாதென்றும் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

## அறமும் தவமும்

மனையறத்தையே மனைத்தவமாக எளிதில் மாற்றிக் காட்டுகிருர் ஆசிரியர் சேக்கிழார்பெருமான். ஞான சம்பந்தரைப் பெற்றெடுத்த தாய் தந்தையர் ஏழாவது நூற்ருண்டின் முற்பகுதியில் சீகாழிப் பதியில் வாழ்ந்த வர்கள். அக்காலத்தில் ஜைன பௌத்த மதங்களின் செல்வாக்கு இந்தியா முழுவதும் பரவியிருந்தது. சைவ சமயநெறி குன்றி மறைந்துவிடும்போலிருந்தது. அந்நிலையைகண்டு மனம் வருந்திய அப் பெரியோர்கள் சீகாழிப் பெருமானுகிய தோணியப்பரிடம் நாள்தோறும் முறையிட்டார்கள். மற்ற சமங்களையெல்லாம் வென்று சிவசமயத் திருவெண்ணீற் றெளியை எங்கும் பரவச் செய்யவல்ல ஓர் அருட்குமரன் தங்கள் குடும்பத்தில் தோன்ற வேண்டுமென்பதே அவர்கள் பிரார்த்தனை. அதனைச் சேக்கிழார் பெருமான்,

"மனையறத்தி லின்பமுறு
மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே
ஆடியசே வடிக்கமலம்

நினைவுறமுன் பரசமயம்
நிராகரித்து நீருக்கும்
புனைமணிப்பூண் காதலனைப்
பெறப்போற்றுந் தவம்புரிந்தார்''

என அருளிச் செய்துள்ளார். உலக நன்மைக்காக ஒரு புத்திரன் தோன்ற வேண்டுமென்பதே அவர்கள் குறிக்கோளாக இருந்ததால் அந்த மனைவாழ்வு தவ வாழ்வாயிற்று.

இனி, திலகவதியாரும் தமது தம்பியாரை வாழ்விக்க வேண்டுமென்ற தயை காரணமாக உயிர் வாழ்ந்தமையால் அதுவும் 'தவவாழ்வே' என அருளிச் செய்துள்ளார் சேக்கிழார் பெருமான். "இம்பர் மனைத் தவம் புரிந்து திலவதியார் இருந்தார்'' என்ற பாடலை நோக்குக. தனக்காக முயல்வது அறம் என்றும் உலக நன்மைக்காக முயல்வது தவம் என்பதும் இதனல் விளங்குகின்றது.

## பாவமாகிய தவம்

இதுவரை மெய்த்தவத்தின் பல்வேறு நெறிகளைப் பார்த்தோம். பாவமாகிய தவம் ஒன்றைச் "செடித்தவம்'' எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிப்பிடுகின்ருர். பொன் வேண்டுமென்று மனம் புழுங்கி இறைவனிடம் மன்ருடும் (திருப்பாச்சிலாச்சிரமம்) பதிகத்தில் இதனைக் காணலாம். முதலை வாயிலிருந்து பிள்ளையை மீட்ட அவர் செம்பைப் பொன்னுக்குவது முடியாத காரியமா? அப்படிப்பட்ட வல்லமை இருந்தும் இரசவாதம் முதலியன செய்யாமல் இறைவனுடனே சண்டையிடுவதுபோல முறையிடுகின்ருர். ஏனெனில், இரசவாதம், காயகல்பம் முதலியன செய்வது உண்மை ஞான நெறிக்கு விரோதமானது. இறைவனுக்குச் சம்மதமில்லாத ஒன்றை நாம் கள்ளத்தனமாகப் பெற

முயற்சிப்பதே அத்தகைய செயலாகும். அவ்வாறு முயன்றால் முடிவில் தீவினையாகித் துன்பத்தையே தரும் என்பதைக் "செடித்தவம் செய்வார் சென்றுழிச் செல்லேன் தீவினை செற்றிடும் என்று" எனச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் அருளியுள்ளார். செடி என்பது பாவம். செடித்தவம் என்பது பாவமாகிய தவம் - பில்லி சூனியம், மாரணம், வசியம் இவையெல்லாங்கூட பாவ மாகிய தவமே. மந்திரங்களையும், தேவதைகளையும் துணையாகக்கொண்டு செய்வதால் தவம்போலக் காணப் பட்டு முடிவில் தீவினையாகி விடுகிறது. ஆகவே அவையெல்லாம் செடித்தவம் என நாம் ஒதுக்கி விடுவோமாக. உலக நன்மைக்காகவும் உண்மை ஞானத்திற்காகவும் முயலும் முயற்சிகளெல்லாம் மெய்த் தவம் ஆகும் என அறிவோமாக.





# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 2 | துன்பங்கட்களாதல் | துன்பங்கட்காளாதல் |
| 12 | 8 | வழக்கம்போல | படிகம்போல |
| 13 | 13 | என | என்பதை |
| 15 | 6 | அல்வாறே | அவ்வாறே |
| 16 | 9 | அலெய | அடைய |
| 26 | 13 | al | at |
| 33 | 25 | பிரபஞ்சத்திற்கு | பிரம்மத்திற்கு |
| 34 | 22 | மூர்த்கியே | மூர்த்தியே |
| 43 | 11 | சற்காரியவாதம் | அநேகாந்தவாதம் |
| 46 | 19 | நியில் | நிதியில் |
| 49 | 19 | ஏனைய | ஏனைய |
| 51 | 18 | மண்ணைப் | மண்ணைப் |
| 53 | 22 | கனவு கண்ட | கண்ட கனவு |
| 56 | 12 | தோஷமே | தோஷமுமே |
| 57 | 10 | முனைந்து | முனைத்து |
| | 19 | இல்லை | இல்லை, |
| 58 | 3 | மூன் | முன் |
| 59 | 23 | சர்வஞ்சத் | சர்வஞ்ஞத் |
| 62 | 25 | விளச்குப் | விளக்குப் |
| | 30 | வேண்டும் | வேண்டும்? |
| 69 | 1 | அனைதையும் | அனைத்தையும் |
| 71 | 18 | அன்பர்கட்குக் | அன்பர்கட்குச் |
| 72 | 26 | மனைவியைத் | மனைவியைக் |
| 75 | 17 | விதிக்கின்றன | விதிக்கின்றன. |
| 77 | 3 | வந்துழையவ | வந்துழையரா |
| | 7 | வாழியால் | வாழியாய் |
| 81 | 11 | அநியாயமான | அந்நியமான |
| 82 | 22 | இகத்தே | அகத்தே |
| | 30 | அகங்களா | அங்கங்களா |
| 83 | 1 | உழவுத்தொழிலைப் போன்றது | உழவு தொழிலைப் போன்றது. |

